# தம்பிமார் கதை

## கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்



திருமதி எம்.எல்.சுகதகுமாரி எம்.ஏ.,எம்.ஃபில்.,

# தம்பிமார்கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்

திருமதி எம்.எல். சுகதகுமாரி
எம்.ஏ., எம்.ஃபில்., டி.ஜி.ற்றி.,

அருள் பதிப்பகம்
66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,
சென்னை - 600 078.
பேசி : 044 - 6538 3000

# பொருளடக்கம்

# வாழ்த்துரை

பேராசிரியர். முனைவர்.
**திருமலர். எம்.எம். மீரான்பிள்ளை**
மேனாள் முதல்வர், தமிழ்த்துறைத் தலைவர்
யுஜிசி முதுநிலை ஆய்வுத்திட்ட
முதன்மை ஆய்வாளர், பல்கலைக் கழகக் கல்லூரி
அரசு யுஜிசி உயர்க் கல்விச் சிறப்புமையம்
திருவனந்தபுரம்.

திருமதி எம்.எல். சுகதகுமாரி எனது நெறியாள்கையில் 'கலிங்கத்துப்பரணியும் செய்யிதத்துப் படைப்போரும் - ஒப்பாய்வு' எனும் தமிழ் - அறபு இலக்கியப் பிணைப்புப் பொருளில் பல்கலைக் கழகக் கல்லூரி தமிழாய்வு மையத்தில் கேரளப் பல்கலைக் கழக முனைவர் பட்டத்திற்காக முழுநேர அடிப்படையில் ஆய்வு செய்து வருபவர். கேரளப் பல்கலைக் கழகத்தின் ஆஸ்பியர் குறுகிய கால உதவிப் பண ஆய்வுத் திட்டத்திற்கு 2011இல் தமிழில் தேர்ந் தெடுக்கப்பட்ட முதலாவது ஆய்வேடு இது என்பது குறிப்பிடத்தக்கது. அந்த ஆய்வேடு இப்போது 'தம்பிமார் கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்' என்ற பெயரில் நூலாக வெளிவருவது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி.

உண்மையான ஆய்வு நெறியாளர் ஞானத்தந்தை ஆவார். அவர்தம் ஆய்வு மாணவர் வளர்ச்சியுற பல்லாற்றானும் உதவ வேண்டியதும் ஊக்க வேண்டியதும் ஒப்பற்றக் கடமையாகும். ஆய்வு மாணவர்களின் கட்டுரை, நூல் தயாரிப்பிலும் வெளியீட்டிலும் உதவி புரிதல் வேண்டும். ஒரு தந்தையைப் போல் களி பேருவுவகை கொள்ளல் வேண்டும்.

நான் முதுகலை பயிலுங்காலத்தில் என்னுடைய ஆசிரியரும் கல்லூரி துணை முதல்வருமான இலக்கண இலக்கிய மொழியியல் வித்தகர் அறிஞர். எஸ். சுப்பிரமணியனார் என்னைப் பெரிதும் தூண்டி உற்சாகப்படுத்தி. ஆசிரியர் மாணவர் கட்டுரைகளைத் திரட்டி தொகுத்து என்னை பதிப்பாசிரியராகக் கொண்டு இரு ஆய்வுக் கட்டுரைக் கோவை நூல்களை வெளியிட ஏற்பாடு செய்து அழகு பார்க்கவும் ஆனந்தம் கொள்ளவும் செய்தது மறக்க முடியாதது. வெளியீட்டு விழாவில் பெருந்தன்மையுடன் "திங்கள் வலித்த காலன்னோன் ஆயினீர்" என வாயார வாழ்த்தவும் செய்தது குறிப்பிடத்தக்கது.

முதுகலை மாணவர் ஆய்வு நூல் பதிப்பாசிரியராக மாறிய இந்த சாதனை வழி உலகப்புகழ் பெற்ற அமெரிக்க காங்கிரஸ் நூலக நூலாசிரியர் தொகையில் நான் இடம்பெறும் வாய்ப்பு பெற்றேன். தொடர்ந்து உலக தேசிய எழுத்தாளர் தகவல் களஞ்சியங்களில் எனது வாழ்வுச் சுருக்கம் இடம் பெற்றது. தமிழகத்தின் அக்காலத்திய அறிஞர் பெருமக்களின் பாராட்டுகளையும் பெற முடிந்தது.

இந்த இனிய அனுபவத்தின் தொடர்ச்சியாக நானும் எனது ஆய்வு மாணவர்களை கட்டுரை எழுதத் தூண்டியும் கருத்தரங்குகளில் வழங்கவும், வெளியிடவும் உற்சாகப்படுத்தியும் வருகிறேன். என்னுடைய ஓர் ஆய்வு மாணவர் ஆய்வேடு அளிப்பதற்கு முன்னரேயே இருபதுக்கும் மேற்பட்ட கருத்தரங்கு களில் பங்குபெற்று கட்டுரைகளை வெளியிட்டது குறிப்பிடத்தக்கது. 2011இல் ஆஸ்பியர் குறுகிய கால ஆய்வுத் திட்டத்திற்கு கேரளப் பல்கலைக்கழகத்தில் தமிழில் தேர்ந்தெடுக்கப்பட்ட இருவரும் எனது ஆய்வு மாணவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

தேர்ந்தெடுக்கப்பட்டதில் முதலாவது ஆய்வாளரே இந்த நூலாசிரியர் திருமதி எம்.எல். சுகதகுமாரி. இவர் ஆய்வு ஆர்வமும் முயற்சியும் உடையவர். கருத்தரங்குகளில் ஆய்வு நுட்பத்தோடு கட்டுரைகளை வழங்கி வருபவர். 2011 ஜூலையில் காயல் பட்டினத்தில் நடைபெற்ற உலக முஸ்லிம் தமிழ் மாநாட்டில் பேராளராகப் பங்கு பெற்று ஆய்வுரை நிகழ்த்தி இலங்கை, மலேசிய

எழுத்தாளர்களின் பாராட்டுதல்களைப் பெற்றவர் என்பதும் கூறத்தக்கது.

தம்பிமார் கதை - கதைப்பாடல் கேரளாவின் தென் திருவிதாங்கூர் பகுதியைச் சார்ந்தது. அரச மரபு தொடர்புடையது. தென் கேரளத்திலும் குமரி மாவட்டத்திலும் வில்லடிச்சான் பாட்டாக வழங்கப்பட்டு வருவது. இக்கதைப் பாடலின் நாயகர்கள் அரசரால் சதித்துக் கொல்லப்பட்டவர்கள். புதுக் கூட்டத்து வாதையாக இப்போது வழிபடப்பட்டு வருகிறவர்கள்.

பெரிதும் அறியப்படாத இந்தக் கதைப்பாடலை பன்முக நோக்கில் ஆய்வு செய்து எம்.எல். சுகதகுமாரி சில உண்மைகளை வெளியிடுகிறார். திருவிதாங்கூர் அரச வரலாறுகளில் தம்பிமார் எதிரிகளாகச் சுட்டப்படுகின்றனர். ஆனால் தம்பிமார் கதையில் அவர்கள் தியாக வீரர்களாக, நேர்மாந்தர்களாகச் சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. இது இப்பகுதி நாட்டு மக்களின் மனப்பாங்கினைச் சுட்டி அமைவதாகும்.

இந்நூலில் தம்பிமார் கதையின் வடிவ அமைப்பு, மொழியமைப்பு, கதை, கதை மாந்தர், நாட்டுப்புறயியல் கூறுகள், வீரயியல் கூறுகள் ஆகியவை விளக்கமாகவும் துலக்கமாகவும் கண்டறியப்படுகின்றன. பிற கதைப்பாடல்களுடன் ஒப்பிட்டுக் காணும் நிலையும் இடம் பெற்றுள்ளது. வரலாற்றின் வன்மை மென்மையும் அடையாளங் காணப்படுகிறது. விறுவிறுப்பான நடையிலமைவதால் சலிப்பின்றி வாய் சிக்காமல் வாசிக்கவும் நேசிக்கவும் முடிகிறது. அதனால் தமிழுலகம் இந்நூலைத் தயங்காமல் ஏற்றுக்கொள்ளும் என எதிர்பார்க்கலாம்.

நாட்டுப்புறக் கதைப்பாடல் ஆய்வில் துணிந்து இறங்கி யிருக்கும் திருமதி. எம்.எல். சுகதகுமாரி இம் முயற்சியில் உறுதி யாகத் தடம் பதித்து இன்னும் பல நூல்களை வருங்காலத்தில் வெளியிடுவார் என எதிர்பார்க்கலாம். முயற்சி வெல்க. வாழ்த்துக்கள் பல.

திருவனந்தபுரம் **திருமலர் எம்.எம். மீரான்பிள்ளை**

கைபேசி : 09495011317

# அணிந்துரை

பேராசிரியை முனைவர்.
**காஞ்சனா பாலு**
தமிழ்த்துறைத் தலைவர்
கேரளப் பல்கலைக்கழகம்,
திருவனந்தபுரம்.

திருமதி எம்.எல். சுகதகுமாரி எனது மேற்பார்வையில் கேரளப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கிய ஆஸ்பியர் குறுகிய கால ஆய்வுத் திட்ட குறு ஆய்வேடு, 'தம்பிமார் கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்' என்ற பெயரில் நூலாக்கம் பெறுவது கண்டு மிக்க மகிழ்ச்சி. 2011இல் தமிழில் பல்கலைக்கழகத்தில் உதவிப் பணத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு குறுகிய கால ஆய்வுத் திட்டங்களில் முதலாவதாக அமையும் பெருமைக்குரியது இது. ஆஸ்பியர் உதவிப் பணத்திற்காக இவ்வாண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட இருவரும் பேராசிரியர் முனைவர் திருமலர் மீரான்பிள்ளையின் ஆய்வு மாணவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ளும் காலத்தில் ஆய்வுக் கட்டுரைகள் தயாரித்து கருத்தரங்குகளில் வழங்கி வெளியிடுவது என்பது பாராட்டத்தக்க முயற்சியாகும். அறிவுத் திறனும் ஆர்வமும் உழைப்பும் உள்ளவர்களாலேயே இது சாத்தியப்படும். இதற்கும் அப்பால் முனைவர் பட்ட ஆய்வுப் பொருளிலிருந்து வேறுபட்ட பொருள் ஒன்றின் அடிப்படையில் குறுகியகால ஆய்வுத் திட்டம் தயாரித்தளிப்பதும் அது உதவிப் பணத்திற்காகத் தேர்ந்தெடுக்கப் படுவதும் அரிய சாதனை என்பதில் ஐயமில்லை. முனைவர் பட்ட ஆய்வு நெறியாளர்கள் முழு மனத்துடன் உதவி ஒத்துழைத்தால் தான் இதை நிகழ்த்த முடியும் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த அரிய வாய்ப்பு ஆய்வாளர் திருமதி எம்.எல். சுகதகுமாரிக்கு வாய்க்கப்பெற்றுள்ளது எனலாம்.

'தாயைப்போல் பிள்ளை; நூலைப் போல் சேலை' என்பது நம்மிடையே வழங்கப்படும் முதுமொழி. திருமதி எம்.எல். சுகதகுமாரியின் முனைவர் பட்ட ஆய்வு நெறியாளர் முதுகலை பயிலுங் காலத்திலேயே இரண்டு ஆய்வுத் தொகுதி நூல்களைப் பதிப்பித்து

சாதனை புரிந்தவர். தொடர்ந்து சில நூல்களை எழுதவும் பதிப்பிக்கவும் செய்த பன்னூலாசிரியர், பல்வேறு உலக தேசியக் கருத்தரங்குகளில் இருநூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கி வெளியிட்ட கட்டுரை வித்தகர். ஆய்வுச் செம்மலாக அறியப்படுபவர். இத்தகைய ஒருவரின் ஆய்வு மாணவி உதவிப் பணத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதிலும் நூல் வெளியிடுவதிலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

தம்பிமார் கதை - கதைப்பாடல் பெரிய அளவில் அறிமுகம் பெறாதது. கேரள வரலாற்றோடு தொடர்புடையது. தமிழ் நாட்டு மாணவி தாம் ஆய்வு மேற்கொள்ளும் மாநிலக் கதைப்பாடலை குறுகிய கால ஆய்வுத் திட்டத்திற்குத் தேர்ந்தெடுத்தது போற்றத்தக்கது.

'தம்பிமார் கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்' நூல் விளக்க ஆய்வாகவும் வரலாற்றாய்வாகவும் ஒப்பாய்வாகவும் முக்கோணப் பார்வையில் அமைகிறது. நாட்டுப்புறயியல் கூறுகள் பற்றிய ஆய்வில் சமூகவியலும் மொழியியலும் கலந்து வந்துள்ளதும் காணத்தக்கது. இந்து சமயக் கூறுகளும் இடம்பெற்றுள்ளன.

கதைப் பாடலின் பொது அமைப்பு, கதையமைப்பு, பாத்திர அமைப்பு, நாட்டுப்புறயியல் வீரயியல் கூறுகள் அமைப்பு ஆகியவை விரிவாக ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளது காணத்தக்கது. ஆய்ந்தறிந்த முடிவுகள் முறையாகத் தரப்படுகின்றன. தங்கு தடையில்லாத நடையும் உள்ளது. நூல் முழுவதும் ஆய்வாளரின் உழைப்பும் முயற்சியும் தடம் பதித்துள்ளதும் காணலாம்.

நாட்டுப்புறயியல் ஆய்வாளர்க்கு அரும்பயனளிக்கும் நூல் இது. இதுபோன்று இருளடைந்து கிடக்கும் கதைப்பாடல்கள் இன்னும் உள்ளன. இவையெல்லாம் ஆய்வாளர்களால் தேடிக் கண்டெடுக்கப்பட்டு வெளியுலகிற்கு அறிமுகம் செய்யப்பட வேண்டியது மிக அவசியமாகும். இத்தகைய முயற்சியின் நல்ல தொடக்கமாக அமையும் இந்நூலை முனைந்து எழுதிய நூலாசிரியருக்கும் தூண்டி ஊக்கமளித்த முனைவர் பட்ட ஆய்வு நெறியாளருக்கும் பாராட்டுகள் உரியன.

**காஞ்சனா பாலு**

திருவனந்தபுரம்

# நன்றியுரை

பாளை புனித சவேரியார் கல்லூரியிலிருந்து எனது ஆசிரியர் முனைவர். வெ. கேசவராஜ் ஆற்றுப்படுத்த, கேரளப் பல்கலையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அடங்கா ஆசையுடன் தென்னகத்தின் பழமையானதும் அரசு யுஜிசி தேசிய உயர்க் கல்விச் சிறப்பு நிறுவனமுமாகிய திருவனந்தபுரம் பல்கலைக் கழகக் கல்லூரியின் தமிழாய்வுத் துறை அறை வாயிலில் முகம் காட்டி அடம்பிடித்து நின்ற என்னை எவரும் கண்டு கொள்ளவில்லை. மிகுந்த கவலையுடனும் ஏமாற்றத்துடனும் நின்ற என்னை மூன்றாவது நாள் ஏறெடுத்துப் பார்த்து, பரிவோடு விசாரித்து எனது வேண்டுகோளை ஏற்று உதவிப் பணத்தோடு ஆய்விற்கு இடமளித்து அன்புகாட்டியுதவியவர் கல்லூரியின் முதல்வரும் தமிழ்த் துறைத் தலைவரும் யுஜிசியின் முதுநிலை ஆய்வுத் திட்ட முதன்மை ஆராய்ச்சியாளருமாகிய மதிப்பிற்குரிய மதிநாவலர் பேராசிரியர் முனைவர். திருமலர். எம்.எம். மீரான் பிள்ளை அவர்கள்.

அடிவாரங்களில் அயர்ந்து கிடக்கும் மாணவர்களை ஆதரவோடு தட்டியெழுப்பி அரவணைத்து ஆர்வமூட்டித் தூண்டி கட்டுரை எழுத ஆவன செய்து கருத்தரங்கச் சிகரங்களில் ஏற்றிவைத்து, கட்டுரைகளை அச்சிட்டு வெளியிட்டு அழகு பார்க்கும் பெருந்தகையாளர் அவர் என்றால் மிகையாகாது. பிறர்க்கில்லாத பெரும் கல்வித்தகுதிகளும் பட்டங்களும் பணித் தகுதிகளும் பெற்றிருந்தும் எதுவும் அறியாதவர்போல் நிறைகுடமாக

வாழ்பவர். இத்தகையவரின் மேற்பார்வையில் அறபு - தமிழ் வீர வடிவங்களில் ஒப்பாய்வு செய்ய எனக்குக் கிடைத்த வாய்ப்பினை பெரும் பேறாகவே கருதுகிறேன்.

கேரளப் பல்கலைக் கழக ஆஸ்பியர் குறுகிய கால உதவிப் பண ஆய்வுத் திட்டத்திற்கு இந்த அருமையானத் தலைப்பை தேர்ந்து விண்ணப்பிக்கத் தூண்டி உற்சாகப்படுத்தியவர் வீர இலக்கிய ஆய்வு வித்தகரான எனது ஆய்வு நெறியாளரே. 2011இல் நெறியாளரின் ஆய்வு மாணவியான நானும் மற்றொருவரும் மட்டுமே தமிழில் இந்த ஆய்வுத்திட்டத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது நெறியாளரின் திறனைச் சுட்டியமைவதாகும். ஆய்விற்குத் தேவையான தமிழ், மலையாளம், ஆங்கிலம் நூல்களை தமது ஆய்வு நூலகத்திலிருந்து அளித்ததோடு அடிக்கடி உசுப்பிவிட்டு ஆய்வேட்டினை விரைந்து முடிக்கவும் காரணமாக அமைந்தவர் அவரே எனலாம். இப்போது இந்த நூலாக்கத்திற்கு ஏற்பாடு செய்ததோடு வாஞ்சையோடு வளமான ஒரு வாழ்த்துரையையும் வழங்கியுள்ளார்.

என்னை ஒரு சிறந்த ஆய்வாளராக, கட்டுரையாளராக மட்டுமின்றி தற்போது ஒரு நூலாசிரியராகவும் வார்த்தெடுப்பதில் பெரும்பங்கு வகிப்பவர் எனது ஆய்வு நெறியாளர் மரியாதைக்குரிய 'சிலேடைச்சித்தர்' பேராசிரியர் முனைவர் திருமலர் மீரான்பிள்ளை அவர்கள். என் வாழ்வில் என்றும் மறக்க முடியாத அவர்களுக்கு நெஞ்சின் ஆழத்திலிருந்து நிலைத்த நன்றிகள்.

'தம்பிமார் கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்' எனும் இந்த குறுகிய கால ஆய்வுத் திட்டத்திற்கு நெறியாளராக இருந்துதவ வேண்டியதும் மறுப்பேதுமின்றி மனமுவந்து இசைந்து ஆய்வேடு சிறப்படைய அரிய ஆலோசனைகளை அளித்துதவிய தோடு அழகியதோர் அணிந்துரையும் வழங்கியவர் கேரளப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியை முனைவர் காஞ்சனா பாலு அவர்கள். ஆர்வம் மீதூற அன்பும் ஆதரவும் காட்டிவரும் அவர்களுக்கும் என் இதயத்தின் ஆழத்திலிருந்து இனிய நன்றிகள்.

இந்த குறுகிய கால ஆய்வுத் திட்டத்திற்கு உதவிப் பணம்

நல்கியதோடு, நூலாக வெளியிட அனுமதியும் வழங்கிய கேரளப் பல்கலைக் கழகத்தார்க்கும் நன்றிகள் உரித்தாகுக. ஆய்வுக்கு ஆதரவளித்து வரும் எங்கள் கல்லூரி முதல்வர், தமிழ்த் துறைத் தலைவர் முனைவர். எஸ். ராஜேந்திரன், துறை ஆசிரியப் பெருமக்கள், அலுவலகத்தார், சக ஆய்வாளர்கள், அன்பர்கள் அனைவருக்கும் ஆழிய நன்றிகள்.

என்னை ஒரு பேராசிரியையாக காணும் ஆர்வத்தில் சிரமங்களைப் பாராது பொறுமையுடன் ஊக்கமளித்து ஆய்வுச் செயல்பாடுகளுக்கு உறுதுணையாய் உதவிவரும் நேசத்திற்குரிய கணவர் திருமிகு. சி. ஞானசேகர், பாசமிகு எனது பெற்றோர், கணவரின் பெற்றோர், அன்பு மகன், சகோதரர்கள், அனைவருக்கும் உள்ளம் நிறைந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இந்நூலை அழகிய முறையில் வடிவமைத்து வெளியிடுகின்ற அருள் பதிப்பகத்தார், அச்சிட்டுதவிய நந்தா கணினியகம், ஜூபிடர் ஆப்செட் அச்சகம் ஆகியவர்களுக்கும் ஆழிய நன்றிகள்.

திருவனந்தபுரம் **எம்.எல். சுகதகுமாரி**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. த.மா.க | - | தம்பிமார் கதை |
| 2. தொ | - | தொகுதி |
| 3. ப | - | பக்கம் |
| 4. பக் | - | பக்கங்கள் |
| 5. பதிப்பர் | - | பதிப்பாசிரியர் |
| 6. மலை | - | மலையாள நூல் |
| 7. முன்னர் | - | முன்னர் குறிப்பிடப்பட்ட நூல் |
| 8. மேலது | - | மேலே குறிப்பிடப்பட்ட நூல் |
| 9. மேலவர் | - | மேலே குறிப்பிடப்பட்டவர் |
| 10. வ | - | வரி |
| 11. வரி | - | வரிகள் |
| 12. op.cit. | - | in the work cited above |
| 13. p | - | page |
| 14. pp | - | pages |

# இயல் - ஒன்று

# ஆய்வு முன்னுரை

## முன்னுரை

நாட்டுப்புற வாய்மொழி இலக்கிய வகைகளுள் கதையாலும் பாக்களாலும் நீட்சி பெற்றவை கதைப்பாடல்கள். இவை புராணக் கதைப்பாடல்கள், வரலாற்றுக் கதைப்பாடல்கள், சமூகக் கதைப்பாடல்கள் எனும் முப்பெரும் பிரிவில் அடங்குவன.

வரலாற்றுக் கதைப்பாடல்கள் பெரும்பாலும் அரசியல் பிரச்சினைகள் காரணமாக எழும் போர்களைப்பற்றி அமைவனவாகும். தம்பிமார் கதை கேரள வரலாறு தொடர்பான ஒரு போர்க் கதைப்பாடலாகும். இது முந்தைய வேணாடு என்னும் திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தில் எழுந்த உள்நாட்டுப் பூசல்கள் காரணமாக நடைபெற்ற போராட்டங்களையும் போர்களையும்பற்றி அமைந்ததாகும்.

இக்கதைப்பாடலின் வடிவ அமைப்பு, மொழி அமைப்பு, கதை, கதை மாந்தர்கள், நாட்டுப்புறயியல், வீரயியல் கூறுகள், வரலாற்று முரண்பாடுகள் ஆகியன ஆய்ந்தறியப்படுவது பயன் தருவதாகும்.

## ஆய்வுத் தலைப்பு

இந்த ஆய்வின் பொருள் தலைப்பு 'தம்பிமார் கதை - கதைப்பாடல் பன்முகக் கண்ணோட்டம்' என்பதாகும்.

## ஆய்வுப் பொருள்

கேரள வரலாற்றுப் போர்க் கதைப்பாடலான தம்பிமார் கதையின் வடிவ அமைப்பு, மொழி அமைப்பு, கதை, கதை

மாந்தர்கள், நாட்டுப்புறயியல், வீரயியல் கூறுகள், வரலாற்று விலகல்கள் பற்றிய பன்முகப் பார்வையே இங்கு ஆய்வுப் பொருளாக அமைகின்றது.

### ஆய்வு நோக்கம்

பெரிதும் அறிமுகமாகாத, கேரள (திருவிதாங்கூர்) வரலாற்றுப் போர்க் கதைப்பாடலான தம்பிமார் கதையின் நோக்கும் போக்கும் உள்ளீடும் ஆய்ந்தறிந்து வழங்குவதே ஆய்வின் முக்கிய நோக்கமாகும்.

### ஆய்வுப் பயன்

இந்த ஆய்வின் வழி திருவிதாங்கூர் வரலாறு தொடர்பான தம்பிமார்கதை, கதைப் பாடலின் வடிவ அமைப்பு, மொழி அமைப்பு, கதை, கதை மாந்தர்கள், நாட்டுப்புறயியல், வீரயியல் கூறுகள், வரலாற்று வீக்கங்கள் ஆகியவை வெளிப்படுத்தப் படுகின்றன. அக்கால மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகிய வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளை அறிய வாய்ப்பு ஏற்படுகிறது. இது போன்ற கேரள வரலாறு தொடர்பான வீரக்கதைப் பாடல்கள் பற்றிய வருங்கால ஆய்விற்கு வழிகாட்டியாகவும் தூண்டுதலாகவும் இந்த ஆய்வு அமைகிறது.

### முன் ஆய்வு அடங்கல்

தம்பிமார் கதை - கதைப்பாடல் மூலம் தி. நடராசன், ப. சர்வேஸ்வரன் ஆகியவர்களின் கூட்டுப் பதிப்பாக, விளக்கமான முகவுரையுடன் 1977இல் வெளிவந்தது. திருமலர் எம்.எம். மீரான் பிள்ளை 1985இல் எழுதி வெளியிட்ட நாட்டுப்புறத் தமிழியல் எனும் வீரக்கதைப் பாடல்கள் விளக்கவியல் கட்டுரைத் தொகுப் பில், முதன்முதலாக 20 பக்கங்களில் விளக்கமும் விரிவும் மிக்க ஆய்வுக் கட்டுரை இடம்பெற்றது குறிப்பிடத் தக்கது.

திருமலர் எம்.எம். மீரான்பிள்ளை 2005இல் பதிப்பித்த 'தமிழுக்குக் கேரளத்தின் பங்களிப்பு' எனும் தேசியக் கருத் தரங்க ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ள ச. மீனாட்சிநாத பிள்ளையின், 'தெக்கன்பாட்டுப் புலவர்களின் பங்களிப்பு' எனும்

கட்டுரையிலும் தம்பிமார் கதை பற்றிய சுருக்க விளக்கம் இடம் பெற்றுள்ளது.

2007இல் திருமலர் எம்.எம் மீரான்பிள்ளையின் நெறியாள்கையில் பால் என்பால் எனும் முதுகலை மாணவர், கேரளப் பல்கலைக் கழகத்திற்கு 'தம்பிமார் கதை - ஓராய்வு' எனும் பொருள் தலைப்பில் ஒரு குறு ஆய்வேடு வழங்கியுள்ளார்.

ஜெ. பத்மகுமாரியின் 'கதாகானங்களுடெ லோகம்' (1988) வெங்ஙானூர் பாலகிருஷ்ணனின் 'கன்யாகுமரி கதகள்' (2004) ஆகிய மலையாள நூல்களிலும் தம்பிமார் கதை பற்றிய கட்டுரைகளைக் காணலாம்.

## முதன் நிலைச் சான்றுகள்

ஆய்வுப் பொருள் தலைப்போடு நேரடித் தொடர்புடைய அடிப்படை மூல ஆதாரங்களே முதன்நிலைச் சான்றுகளாகும். தமிழிலுள்ள தம்பிமார்கதை கதைப்பாடல், இதன் இணை வடிவங்களான மலையாளத்திலுள்ள தெக்கன்பாட்டு வடிவம் வலிய தம்பி குஞ்சு தம்பி கதை, தமிழிலுள்ள ஒட்டன்கதை கதைப்பாடல் ஆகியன முதன்நிலைச் சான்றுகளாகும்.

## துணை நிலைச் சான்றுகள்

ஆய்வுக்குத் துணையாக அமைகின்ற, முதன்நிலை மூலச் சான்றுகளோடு தொடர்புடையவை துணைநிலைச் சான்று களாகும்.

கேரள வரலாற்றோடு தொடர்புடைய பிற வீரக்கதைப் பாடல்கள், அவை பற்றிய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கேரள வரலாற்று நூல்கள், கட்டுரைகள் ஆகியன துணைநிலைச் சான்றுகளாக அமைவனவாகும்.

## ஆய்வு அணுகுமுறை

திரட்டித் தொகுக்கப்பட்ட தரவுகள் இயல்களுக்கேற்பப் பகுக்கப்பட்டு விளக்கமுறை ஆய்விற்குட்படுத்தப்பட்டு மதிப்பீட்டுத் திறனாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. தம்பிமார்

கதை வரலாறு தொடர்பான கதைப்பாடலாதலின் வரலாற்று நோக்கிலும் ஆய்வு நடத்தப்பட்டுள்ளது. ஆங்காங்கே ஒப்பாய்வும் அமைந்து செல்கின்றது.

## ஆய்வு மொழிநடை

பொது மொழிநடை இலக்கியத் தமிழாகவே அமைகின்றது. மலையாள மொழியோடு தொடர்புடைய தெக்கன் கதைப் பாடலாக, வில்லுப்பாட்டாகத் தம்பிமார் கதை அமைவதால் மலையாள மொழிச் சொற்கள் கலந்து வருவது தவிர்க்கவியலாததாகின்றது. நாட்டுப்புறக் கதைப்பாடலில் பாமர வழக்குச் சொற்கள் இடம் பெறுவது இயல்பாதலின் அவையும் ஆங்காங்கே வந்து செல்கின்றன.

## கருதுகோள்

முந்தைய கேரளத்தின் முக்கிய சமஸ்த்தானமாகிய திருவிதாங்கூரில் நடைபெற்ற உள்நாட்டுப் போரினை அடிப்படையாகக் கொண்ட தம்பிமார்கதை, வாய்மொழியளவில் கதைப்பாட்டாகவும், வில்லுப்பாட்டாகவும், தற்போதைய கன்னியாகுமரி, திருவனந்தபுரம் மாவட்டங்களடங்கிய முந்தைய திருவிதாங்கூர் பகுதிகளில் மக்கள் மத்தியில் பாடப்பெற்று வந்ததாகும். இக் கதைப்பாடலின் வடிவ அமைப்பும் மொழி அமைப்பும் இப்பாடல் பல காலமாகப் பாமரப் பாடகர்களால் பல பகுதிகளில் பாடப்பட்டு பொதுமக்களால் ஆர்வமுடன் செவிமடுக்கப்பட்ட நிலையை சுட்டியமைவதாகும்.

இக்கதைப் பாடலின் கதைத் திட்டமும் பின்னலும் சிக்கலும் திருப்பமும் முடிவும் விளைவும் கதைக் கேட்போர்களின் ஆர்வத்தை மிகுவிக்கும் நோக்கில் அமைந்ததாகும். இக்கதை, மக்கள் மத்தியில் வழங்கப்பட்டு வந்த காரணத்தாலேயே கதைப் பாடகர்களால் கதைப்பாடலாக உருவாக்கப்பட்டது என்பது தெளிவு.

இக்கதைப்பாடலில் இடம்பெறும் பெரும்பாலான கதை மாந்தர்கள் 18ஆம் நூற்றாண்டில் திருவிதாங்கூர் பகுதிகளில் வாழ்ந்தவராவர். சிலர் மக்களால் பெரிதும் விரும்பிப் போற்றப் படும் வீரர்களுமாவர். ஆதலின் மன்னர் மார்த்தாண்ட வர்மாவை

எதிர்த்த தம்பிமார் இக்கதைப் பாடலில் தலைமை மாந்தராகச் சித்திரிக்கப்பட்டனர் எனலாம். அக்கால மக்களின் வாழ்வியல் கூறுகளாக நாட்டுப்புறயியல் கூறுகள் அமைவதும் காணத் தக்கது. அடிக்கடி எழுந்த போரும் பூசல்களும் தொடர்பான செயல்பாடுகளை வீரயியல் கூறுகள் சுட்டியமைவதும் குறிப்பிடத்தக்கது.

பாடலாகப் பாடியவர்களின், ஏட்டில் எழுதியவர்களின் கற்பனை ஆர்வம் காரணமாக அல்லது வரலாற்றறிவின் குறைவு காரணமாகச் சில வரலாற்று நழுவல்களும் மாறுபாடுகளும் இடம் பெற்றுள்ளதும் காணத்தக்கது. மொத்தத்தில் கேரள (திருவிதாங் கூர்) வரலாற்றோடு தொடர்புடைய சமூக அரசியல் இலக் கியப் பேழையாக தம்பிமார்கதை அமைகிறது என்பது கருதுகோள்.

## ஆய்வின் அமைப்பு

இந்த ஆய்வு கீழ்க்கண்ட ஏழு இயல்களைத் தன்னகத்தே கொண்டமைந்ததாகும்.

1. ஆய்வு முன்னுரை
2. கேரள வரலாற்று வீரப்போர்க் கதைப்பாடல்கள்
3. வடிவ அமைப்பும் மொழி அமைப்பும்
4. கதையும் கதைமாந்தரும்
5. நாட்டுப்புறயியல் வீரயியல் கூறுகள்
6. தம்பிமார் கதையும் திருவிதாங்கூர் வரலாறும்
7. ஆய்வு முடிவுகள்

## இயல் ஒன்று

முதலாவது இயல் ஆய்வு முன்னுரையாக அமைந்துள்ளது. ஆய்வுப் போக்கின் பல்வேறு கூறுகளும் ஆய்வின் அமைப்பும் இதில் தரப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு

இரண்டாவது இயல் கேரள வரலாற்று வீரப் போர்க் கதைப் பாடல்கள் என்பதாகும். கதைப்பாடல் விளக்கம், தோற்றம், வகை கள், வரலாற்று வீரப்போர்க் கதைப்பாடல்கள், கேரள வரலாற்றுப்

போர்க்கதைப் பாடல்கள், தம்பிமார் கதையின் மலையாள, தமிழ் இணை வடிவங்கள் ஆகியன இதில் விளக்கப்படுகின்றன.

**இயல் மூன்று**

வடிவ அமைப்பும் மொழி அமைப்பும் என்பது இந்த இயல், காப்பு, வணக்கம், வாழ்த்து, பெயரமைப்பு, காலக்குறிப்பு, பா அமைப்பு, இறுதி வாழ்த்து, பயண ஊர்ப்பட்டியல் ஆகியன வடிவ அமைப்புக்கூறுகளாக அடையாளங் காணப்படுகின்றன. சொல்லமைப்பு, அந்தாதி அமைப்பு, தொடரமைப்பு, உரைக்குறிப்பு, உரையாடல் அமைப்பு, ஒசையமைப்பு, வருணனை, உவமையமைப்பு ஆகியன மொழியமைப்புக் கூறுகளாக எடுத்துக் காட்டப்படுகின்றன.

**இயல் நான்கு**

கதையும் கதைமாந்தர்களும் என்பது நான்காவது இயலாக அமைகிறது. இந்த இயலில் கதைக்கூற்று, கதைத்திட்டம், தொடக்கம், பின்னல், வளர்ச்சி, திருப்பம், முடிவு, விளைவு, கிளைக்கதை ஆகியவை கதையமைப்புக் கூறுகளாகக் கண்டறியப்படுகின்றன. நேர் எதிர்த் தலைமை மாந்தர், நேர் எதிர்த் துணைமை மாந்தர், நேர் எதிர் குழு மாந்தர் ஆகியோர் குணநலன் அமைப்பும் ஆய்ந்தறியப்படுகின்றது.

**இயல் ஐந்து**

நாட்டுப்புறயியல், வீரயியல் கூறுகள் என்பது இந்த இயலின் தலைப்பாகும். பிறப்பு, தாலாட்டு, மணம், இறப்பு, ஒப்பாரி, பழமொழி, கல்வி பயிற்றுவித்தல், பாதம் பணிதல், விடைபெறல், உலா வருதல், முகம் காண்பித்தல், குரவையிடுதல், ஆடையணி பூணுதல் ஆகியவை பழக்க வழக்கங்களாக எடுத்துக் காட்டப்படுகின்றன. சகுனம், சோதிடம், விதி, சத்தியம் செய்தல், மீமானிடம், தெய்வமாக்கல் ஆகியவை நம்பிக்கைக் கூறுகளாக விளக்கப்படுகின்றன.

தூது, படை, படைப்பயணம், சூறையாடுதல், வஞ்சினம், முகாம், முற்றுகை, போரிடுதல், களக்காட்சி, சிறைப்பிடித்தல், வென்றி ஆகியவை வீரயியல் கூறுகளாக எடுத்துரைக்கப் பெறுகின்றன.

## இயல் ஆறு

தம்பிமார் கதையும் திருவிதாங்கூர் வரலாறும் என்பது ஆறாவது இயலாகும். தம்பிமார் கதை வரலாறும், திருவிதாங்கூர் வரலாற்று நூல்கள் குறிப்பிடும் வரலாறும் ஒப்புநோக்கப்பட்டு வரலாற்று மாறுபாடுகள் அடையாளங் காணப்படுகின்றன. தம்பிமார், மார்த்தாண்டவர்மா, பிள்ளைமார் மாடம்பிமார் ஆகியோர் வரலாற்றில் இடம் பெறும் முரண்பாடுகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

## இயல் ஏழு

ஆய்வு முடிவுகள் என்பது ஏழாவது இயலாக அமைகிறது. இரண்டாவது இயலிலிருந்து ஆறாவது இயல் வரையிலான ஐந்து இயல்கள் வழி ஆய்ந்தறியப்பட்ட முடிவுகள் இவ்வியலில் இயல் வாரியாக நிரல்படத் தொகுத்துத் தரப்படுகின்றன.

## சுருக்கக் குறியீட்டு விளக்கப் பட்டியல்

ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ள பல்வேறு நூல்கள் தொடர்பாக அமைந்த சுருக்கக் குறியீடுகளின் விரிவாக்கம் இப்பட்டியலில் தரப்படுகின்றன. இது முதலாவது இயலுக்கு முன்னர் அளிக்கப்படுகிறது.

## பின்னிணைப்பு

பின்னிணைப்பாக, ஆய்வுக்கு உதவிய தமிழ் நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், மலையாள நூல்கள், ஆங்கில நூல்கள் நிரல்படுத்தப்பட்டு 'துணைநூற் பட்டியல்' என்ற தலைப்பில் நூலின் இறுதியில் இணைக்கப்படுகிறது.

## முடிவுரை

இந்த ஆய்வின் போக்கு, நோக்கு, அமைப்பு, உள்ளீடு கூறுகள் பற்றி இவ்வியல் சுட்டுகின்றது. ஆய்வின் விளைவாகப் பெறப்படும் ஆய்வு முடிவுகள் பற்றியும் கூறுகின்றது. மொத்தத்தில் ஆய்வுத் திட்டத்தைத் திட்ப நுட்பத்துடன் சுருக்கமாகவும் கட்டுக்கோப்புடனும் இவ்வியல் அறிமுகம் செய்கின்றது.

# இயல் - இரண்டு

# கேரள வரலாற்று வீரப்போர்க் கதைப்பாடல்கள்

## முன்னுரை

செவ்வியல் இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்னரே நாகரிகம் தொடாத பாமர மக்களிடம் இயல்பாக எழுந்தவை நாட்டுப்புற இலக்கியங்கள். நாட்டு நகரத்திற்குப் புறத்தே அமைந்த ஊர்ப் பகுதிகளில் இவை வழங்கப்படுவதால் நாட்டுப்புற இலக்கியங்கள் எனப் பெயர் பெற்றன.

தாலாட்டு, விடுகதை, பழமொழி, ஒப்பாரி, தெம்மாங்கு, கும்மி, தொழில் பாடல்கள், கதைப்பாடல்கள் ஆகியவை நாட்டுப்புற இலக்கிய வடிவங்களாகும். புராணக் கதைப் பாடல்கள், சமூகக் கதைப் பாடல்கள், வரலாற்றுக் கதைப் பாடல்கள் என முப்பெரும் பிரிவுகளைக் கொண்டவை கதைப் பாடல்கள். வரலாற்றுக் கதைப்பாடல்கள் பெரும்பாலும் வீரப்போர்க் கதைப்பாடல்களாக அமைவது காணலாம்.

## கதைப்பாடல் - விளக்கம்

'Ballare' எனும் இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து தோன்றியது 'Ballad' எனும் கதைப்பாடலைக் குறிக்கும் சொல். 'பால்லயர்' என்றால் 'ஆடிப்பாடும் நடனம்' என்பது பொருள். 'பாலட்' எனின் 'கதைப்பாடல்' என்பது பொருளாகும். இதிலிருந்து

கதையைப் பாடலாகப் பாடுதலே கதைப்பாடல் என்பது பெறப் படுகிறது.

ஒரு நீண்ட கதையைச் செவிக்கு இனிமையாகவும் மனத்திற்கு மகிழ்ச்சியாகவும் அமையும் வகையில் எளிமையான பாடல்களால் ஓசையுடன் பாடித் தருவதே கதைப்பாடலின் நோக்கமாகும்.[1] கதைப்பாடல்கள் பரம்பரையாக நாட்டுப்புறப் பாமர மக்களால் வாய்மொழியாகப் பாடப்பட்டு வரும் இயல்புடையன.[2]

**கதைப்பாடல் - தோற்றம்**

ஒவ்வோர் இலக்கியமும் அந்தந்தக் கால மக்களின் வாழ்வுச் சூழலுக்கேற்பவே தோன்றியுள்ளது காணலாம்.[3] மக்களின் ஆர்வமும் விருப்பமும் தேவையும் இதற்குக் காரணிகளாக அமைகின்றன.

நாட்டுப்புறப் பகுதிகளிலுள்ள பல்வேறு வகைத் தொழிலாளர்கள் மாலை நேரங்களில் ஓய்வு நேரங்களைப் பொழுதுபோக்காக அமைக்க விரும்பினர். உழைப்பினால் ஏற்பட்ட உடல் மனச்சோர்வும் வருத்தமும் இதனால் நீங்கும் என நம்பினர். இதற்கு அவர்களுக்குக் கற்பனையும் வருணனையும் சந்தமும் கலந்த கதைகள் தேவைப்பட்டன.

பாமரர்களில் மொழியறிவும் குரல் வளமும் உடையவர்கள் தங்கள் பகுதிகளில் நடந்த முக்கிய நிகழ்வுகளின் அடிப்படையில் சில கதைப் பாடல்களை எழுதினர். ஒருவர் பாட, பலர் கூடியிருந்து கதை கேட்டு மகிழும் பழக்கம் பண்டைக் காலத்தில் இருந்தது.[4]

இதனடிப்படையில் இக்கதைப்பாடல்கள் கதா கலாட்சேபமாகவும் வில்லுப்பாட்டாகவும் பாடப்பட்டன. இவ்வடிவங்களில் புராணமும் சமூகமும் வரலாறும் தொடர்புடைய கதைகள் பயன்படுத்தப்பட்டன. வரலாற்றுக் கதைகளில் வட்டார வீரர்களின் சாதனைகள் பாடப்பட்டன. வட்டாரத்திலுள்ள மக்களின் வாழ்வியல் பண்பாடும் இடம்பெற்றன.

## கதைப்பாடல் வகைகள்

தமிழிலுள்ள கதைப்பாடல்கள் பொருள் நோக்கில் முப்பெரும் பிரிவில் அடங்குவனவாகும். முதலாவது வகையில், தெய்வ இதிகாசப் புராணக் கதைப் பாடல்கள் இடம் பெறுகின்றன. இரண்டாவது வகையில் சமூகம், குடும்பம், காதல் தொடர்பான கதைப்பாடல்கள் அடங்கும். மூன்றாவது வகை வரலாற்றுப் போர் கதைப்பாடல்களாக அமைகின்றன.

## தெய்வ இதிகாசப் புராணக் கதைப்பாடல்கள்

இவை தெய்வங்கள், இதிகாச புராணங்கள் தொடர்பான நிகழ்வுகளின் அடிப்படையில் எழுந்தனவாகும். பஞ்ச பாண்டவர் வனவாசம், சுடலைமாடன் கதை, வாலி மோட்சம், கிருஷ்ணன் தூது, கர்ண மகாராசன் சண்டை, இசக்கியம்மன் கதை, பஞ்ச பாண்டவர் கும்மி, அல்லியரசாணி மாலை, வைகுந்த அம்மானை, புலந்திரன் தூது, ஏணியேற்றம், பவளக்கொடி மாலை, ஆரவல்லி சூரவல்லி கதை, நீலியம்மன் கதை, மாரியம்மன் கதை, சாஸ்த்தா கதை, மதன காமராசன் கதை, அபிமன்னன் சுந்தரி மாலை, ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி, புவனேந்திரன் அம்மானை, தோட்டுக்காரி அம்மன் கதை, நாலு மந்திரி கதை போன்றவை இவ்வகையில் அடங்கும்

## சமூகம் குடும்பம் காதல் கதைப்பாடல்கள்

சமூகம், குடும்பம், காதல் தொடர்பான நிகழ்வுகளின் அடிப்படையில் பிறந்தவை இவை. கள்ளழகர் அம்மானை, அண்ணன்மார் சுவாமி கதை, கித்தேரியம்மாள் அம்மானை, பெரியண்ணன் சின்னண்ணன் கதை, நல்லதங்காள் கதை, முத்துப்பட்டன் கதை, பூலங்கொண்டாள் கதை, காஞ்சியம்மன் கதை, காத்தவராயன் அம்மானை, சிதம்பரநாடார் கதை, காத்தவராயன் கதை, மதுரை வீரசுவாமி கதை, வெள்ளைக்கார சுவாமி கதை, சுடலைமாடன் கதை, சின்னத்தம்பி கதை, சேர்வைக்காரன் கதை, சின்ன நாடான் கதை, கவுதல மாடன் கதை, வலியகேசி கதை, ஆனாஞ்சி கதை, தடி வீரய்யன் கதை, வைகுண்டர் கதை, மதுரை வீரசுவாமி பாட்டு, ஜம்புலிங்கம் கதை,

குலேபகாவலி பாட்டு, கல்வத்து நாயகர் காரணக்கதை, காட்டுபாவாசாகிபு அம்மானை, மான் ஈமான் கிஸ்ஸா ஆகியவை இவ்வகையில் அடங்கும்.

## வரலாற்றுப் போர்க் கதைப்பாடல்கள்

குறிப்பிட்ட காலத்தில் நடைபெற்ற அரசியல் போர் நிகழ்வுகளை, வீரச் சாகசங்களைக் கற்பனை கலந்து தருவன வரலாற்றுப் போர்க்கதைப் பாடல்கள்.[5] நீதிக்காகவும் நேர்மைக்காவும் நெஞ்சுறுதியுடன் போராடி மக்கள் நெஞ்சிலும் நினைவிலும் நிலைத்து நிற்கும் வீரர்களின் வாழ்வும் வரலாறுமே இவற்றில் பாடுபொருளாக அமையும்.[6] இவை அம்மானை, கதை, சிந்து, சண்டை, மாலை, கும்மி, படைப்போர், கிஸ்ஸா, நாமா ஆகிய வகைகளில் அடங்குவனவாகும்.

### கதை

ஐவர் ராசாக்கள் கதை, மலுக்கு முலுக்கு ராசன் கதை, இத்ரீஸ் கதை, குருசேத்திரக் கதை, பஞ்ச பாண்டவர் கதை, தேசிங்குராசன் கதை, வெங்கலராசன் கதை, வெட்டும் பெருமாள் கதை, கட்டப்பொம்மு கதை, வீணாதி வீணன் கதை, தம்பிமார் கதை, கேரள வர்மா கதை, எட்டுக்கூட்டத் தம்புரான் கதை, சின்ன மருது பெரிய மருது கதை, ஒட்டன் கதை.

### அம்மானை

இராமப்ப அய்யன் அம்மானை, மகாபாரத அம்மானை, இசுவா அம்மானை, பப்பரத்தியார் அம்மானை, சீறா அம்மானை, அலியார் அம்மானை, சிவகங்கை அம்மானை, தேசிங்குராசன் அம்மானை, கர்பலா அம்மானை, இபுறாகீம் சகீது அம்மானை, நபி அவதார அம்மானை.

### கும்மி

சிவகங்கை கும்மி, கட்டபொம்மன் கும்மி, சின்னமலைக் கும்மி.

### சிந்து

பூலித்தேவன் சிந்து, கட்டப்பொம்மன் சிந்து.

**சண்டை**

துருக்கிச் சண்டை, கான்சாகிபு சண்டை.

**மாலை**

பத்ர் மாலை, முகம்மதனிபா மாலை.

**படைப்போர்**

சக்கூன் படைப்போர், அலியார் படைப்போர், காசீம் படைப்போர், இரவிக்குட்டிப் பிள்ளைபோர், கன்னடியன்போர், காசீம்படைவெட்டு, அந்திரயவனன் படைவெட்டு.

**நாமா**

அலியார் நாமா, பத்ர் நாமா.

**கிஸ்ஸா**

சைத்தூன் கிஸ்ஸா, முகம்தனிபு கிஸ்ஸா, அபூசகுமா கிஸ்ஸா, அலியார் கிஸ்ஸா.

**பிற**

திவான் வெற்றி.

## கேரள வரலாற்றுப் போர்க் கதைப்பாடல்கள்

கேரள வரலாறு தொடர்பான போர்க்கதைப் பாடல்கள் தமிழில் மட்டுமின்றி மலையாளத்திலும் காணப்படுகின்றன. கேரளத்தின் தெற்கிலுள்ள முந்தைய திருவிதாங்கூர் சமஸ்த்தானப் பகுதிகளில் நடைபெற்று, உருவான கதைப் பாடல்களைத் தெக்கன் பாட்டுகள் என்பர்.[7] தம்பிமார் கதை (வலய தம்பி குஞ்சு தம்பி கதை), இரவிக்குட்டிப் பிள்ளைபோர் (கணியான்குளம் போர்), திவான் வெற்றி, ஒட்டன் கதை, வெங்கலராசன் கதை (வலங்கையர் கதை), அனந்த பத்மநாபன் பாட்டு, கேரள வர்மா கதை (புது வாதைப் பாட்டு), மார்த்தாண்ட மகாத்மியம் ஆகியவை முக்கியமான தெக்கன் பாட்டுக்களாகக் கருதத்தக்கனவாகும். இவற்றில் பெரும்பாலானவை தமிழிலும் மலையாளத்திலும் அமைவது குறிப்பிடத்தக்கது.

கேரளத்தின் வடக்குப் பகுதியில் வாழ்ந்திருந்த குறுநில மன்னர்களிடையே உருவான போராட்டங்களையும் பூசல்களையும் பற்றி எழுந்த கதைப் பாடல்களை வடக்கன் பாட்டுகள் என்பர்.[8]

தச்சோளி ஒதேனன், ஆரோமல் சேவகர், கண்ணப்பச் சேவகர், குடமலைக் கொங்கி, ஆரோமலுண்ணி பற்றிய கதைப்பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தனவாகும்.

இவை தவிர கேரளாவின் வடக்கிலுள்ள மலைப்புரம், கோழிக்கோடு, கண்ணனூர் பகுதிகளில் முஸ்லீம் வரலாறு தொடர்பான 'மாப்பிளா கதா பாட்டுகள்' எனும் போர்க்கதைப் பாடல்கள் வழங்கப்பட்டு வருவதும் குறிப்பிடத்தக்கது.

அவையாவன : கர்பலா கிஸ்ஸா, குனைன் கிஸ்ஸா, கைபர் கிஸ்ஸா, சைத்தூன் கிஸ்ஸா, மலைப்புரம் சிந்து, உகது படைப்பாட்டு, எசீது படைப்பாட்டு, குனைன் படைப்பாட்டு, கைபர் படைப்பாட்டு, சக்கூன் படைப்பாட்டு, செய்யிதத்து படைப்பாட்டு, பத்ர் படைப்பாட்டு, தபூக் படைப்பாட்டு, மலைப்புரம் படைப்பாட்டு, கர்பலா படைப்பாட்டு, யமாமத் படைப்பாட்டு.

## திருவிதாங்கூர் வரலாற்றுப் போர்க் கதைப்பாடல்கள்

இரவிக் குட்டிப் பிள்ளைபோர், திவான் வெற்றி, ஒட்டன் கதை, வெங்கலராசன் கதை, தம்பிமார் கதை ஆகியவை அச்சில் வந்த முக்கியமான திருவிதாங்கூர் வரலாற்றுப் போர்க்கதைப் பாடல்களாகும். கேரள வர்மா கதை, மார்த்தாண்ட வர்மா மகாத்மியம், வலிய தம்பி குஞ்சு தம்பி கதை ஆகியவை நூலாக்கம் பெறவில்லை. வலிய தம்பி குஞ்சு தம்பி கதையும் ஒட்டன் கதையும் தம்பிமார் கதையின் இணை வடிவங்களாக அமைவது காணலாம்.

## இரவிக்குட்டிப் பிள்ளை போர்

வேணாட்டு மன்னர் ரவிவர்மாவின் (கி.பி. 1611-63) ஆட்சிக் காலத்தில் மதுரை திருமலை நாயக்கரின் படைகளுக்கெதிராக நடைபெற்ற கணியாங்குளம் போர்

பற்றியது இக்கதைப்பாடல்.[9] இப்போரில் வேணாட்டின் படைத்தளபதியாகச் செயல்பட்டவர் இரவிக் குட்டிப்பிள்ளை. நாயக்கர் படைகளின் தளபதியாகப் போரிட்டவர் இராமப்ப அய்யன். இதுபற்றி இராமப்ப அய்யன் அம்மானை என்ற கதைப் பாடலும் எழுந்துள்ளது குறிப்பிடத்தக்கது. கி.பி. 1645 ஜூலை 18இல் நாகர்கோவிலுக்கு அருகிலுள்ள கணியாங்குளம் எனும் இடத்தில் இப்போர் நிகழ்ந்ததால் இக்கதைப் பாட்டிற்குக் கணியாங்குளம் போர் என்ற பெயரும் உண்டு.

மதுரையை ஆண்டு வந்த திருமலை நாயக்கர் (கி.பி. 1623 - 1669) வேணாட்டு வேந்தனை வென்று திறைப் பொருள் பெற்று வருமாறு தமது படைத்தளபதி வேலய்யன் தலைமையில் பெரும்படையை அனுப்பினார். வேணாட்டில் வந்த வேலய்யன் வரும் வழியில் பெருங்கொள்ளைகளை நடத்தத் தொடங்கினார். வேணாட்டு அமைச்சர்கள் நேரடியாக மோதிடப் பயந்து சூழ்ச்சியால் அவனைக் கொலை செய்தனர். இதனால் ஆத்திரமடைந்த திருமலை நாயக்கர், தமது படைத்தளபதி இராமப்ப அய்யனின் தலைமையில் வேணாட்டை வெல்ல படையெடுப்பு நடத்த ஏற்பாடு செய்தார். வேணாட்டு தளபதிகள் பலரும் பயந்து ஒதுங்க அமைச்சர் இரவிக் குட்டிப்பிள்ளை துணிந்து படைநடத்திச் சென்றார்.

கணியாங்குளத்தில் நடந்த போரில் நாயக்கர்கள் எண்ணற்றோர் இறந்துபட்டனர். வஞ்சகச் சூழ்ச்சி கொண்ட இராமப்பன், துணைப் படைக்குத் தலைமை வகித்த வேணாட்டு அமைச்சர்களுக்குப் பெரும் பொன்னும் பொருளும் கொடுத்துத் திடீரெனப் பின்வாங்கச் செய்தார். எனினும் மனந்தளராத இரவி கடைசிவரை எதிர்த்து நின்று போராடி உயிர்விட்டார்.

இரவியின் தலையை எடுத்துச் சென்று திருமலையின் முன் காட்சிக்கு வைக்க, மன்னர் “புறமுதுகு காட்டாது தனித்து நின்ற வீரரையா இப்படி அவமானப்படுத்துவது?” என்று ஆத்திரப்பட்டுச் சீறினார்.

இரவியின் வளர்ப்பு மகன் காளி தீரமுடன் மதுரை சென்று தந்தையின் உடலையும் தலையையும் பெற்று வந்தார். மன்னர்

ரவி வர்மாவும் நாட்டு மக்களும் இரவிக்கு அஞ்சலி செலுத்த, இரவியின் உடல் கேரளபுரத்தில் அடக்கம் செய்யப்பட்டது. இலங்கம் பத்திரகாளி கோவிலில் (அருமனை) இரவி தற்போது தெய்வமாக வழிபடப்படுவது குறிப்பிடத்தக்கது.

**வெங்கலராசன் கதை**

இக்கதைப் பாடல் கி.பி. 1706இல் எழுதப்பட்டதாகக் கூறப்படுகிறது. வேணாட்டைக் கி.பி. 1684-1718 கால கட்டத்தில் ஆட்சி செய்த இராமவர்மாவோடு தொடர்புடைய ஒரு பெண் மறுப்பு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது.

தென் குமரி சாமிக்காட்டுவிளை என்னும் இடத்தில் வெங்கலராசன் என்னும் நாடார் குறுநிலமன்னர் ஆண்டு வந்தார். இவரது மகள் திரைமுகத்தழகி பெயரினைப் போல் பேரழகி.

ஒருநாள் வெங்கலராசன் பறக்கை கோயிலில் நடக்கும் ஆறாட்டுத் திருவிழாவுக்கு தன் மகளுடன் சென்றான். அங்கு வருகை புரிந்த வஞ்சிநாட்டு மன்னர் திரைமுகத்தழகியின் அழகில் மயங்கிக் காதல் கொள்கிறார். உடனே தமது அமைச்சரை அனுப்பிப் பெண் கேட்டுத் தூது விடுகிறார். தாய் வழி தாயமுறைக்குட்பட்ட வெங்கலராசன், மருமக்கட்தாய முறைக்குட்பட்டவருக்கு மகளை கொடுக்கவியலாது என மறுத்துவிட்டான்.

ஆத்திரமடைந்த மன்னர் உடனே சாமிக்காட்டு விளை நோக்கிப் படையனுப்ப உத்தரவிட்டார். பெரும் படையை எதிர்க்க முடியாத கவலையில் ஆழ்ந்திருந்த தந்தையிடம் சென்ற திரைமுகத்தழகி, படையெடுத்து வரும் மன்னன் காலடியில் தன் தலையை அறுத்தெறியுமாறு வற்புறுத்திக் கூறுகிறாள். தன்மானமிகு வெங்கலராசன் அவ்வாறு செய்ய, வஞ்சி மன்னன் அதிர்ச்சியும் வருத்தமும் உற்றுத் திரும்பிப் போனான். வெங்கலராசன் பாசத்திற்குரிய தமது மகளை இழக்கக் காரணமான வஞ்சி நாட்டில் இருக்கமாட்டேன் என்று கூறிக் கண்ணீருடன் பாண்டிய நாட்டிற்குச் செல்கிறான்.[10]

இக்கதைப்பாடலுக்கு 'வலங்கையர் கதை' என்ற பெயரும் உண்டு. பேரரசரின் எதேச்சதிகார குணத்தையும் சிற்றரசரின் தன்மானமும் தீரமும் மிக்க செயலினையும் வெளிப்படுத்தும் கதை இது எனலாம். பல கதைப் பாடல்களில் போன்று இதிலும் மகட்கொடை மறுப்பே கதைப் பொருளாவதும் காணத்தக்கது.

## திவான் வெற்றி

திருவிதாங்கூர் மன்னன் தர்மராஜா என்ற கார்த்திகை திருநாளின் (1758 - 1798) பிரதம அமைச்சராகவும், நாட்டின் முதல் திவானாகவும் செயலாற்றியவர் குன்னத்தூர் புத்தன் வீட்டில் கேசவப்பிள்ளை என்பவர். இவர் தமது முற்போக்குத் திட்டங்களால் பொதுமக்களால் பெரிதும் மதிக்கப்பட்டவர். சிறந்த நிர்வாகியும் ராஜதந்திரியுமான இவருக்கு ஆங்கிலேய ஆளுநர் மார்னிங்டன் பிரபு, 'ராஜா' என்னும் சிறப்புப் பட்டத்தை வழங்கி கவுரவித்தார்.

தென் திருவிதாங்கூரின் பெரும் வணிகரான பூவாறு போக்குமூசா மரைக்காயரின் பூவாறு, தேங்காய்ப்பட்டினம் வீடுகளில் நின்று வளர்ந்து அரண்மனையில் பணியமர்த்தப் பட்டவர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது.

தேங்காய்ப்பட்டினம் புத்தன் வீட்டில் வாழ்ந்தவர்களான போக்குமூசா மரைக்காயரின் உறவினர்களான பெரும் புலவர் குஞ்சுமூசா கவிராசர், இசைத்தமிழ் வாலகவி மலையாளம் பக்கீர் மீரான் பிள்ளை பாவலர் ஆகியவர்களோடு உள்ள நெருக்கமான உறவும் தொடர்புமே இவரை மதிநுட்பமுடையவராக மாற்றி உன்னதப் பதவிகளில் உயர்த்தியது என்பது வரலாறு.[11]

மைசூர் மன்னர் ஹைதர் அலியின் மகன் திப்புச் சுல்த்தான் திருவிதாங்கூரை நோக்கிப் படையெடுத்தார். திருவிதாங்கூர் மன்னர், திவான் கேசவதாஸ் தலைமையில் படைகளை அனுப்பி வைத்தார். திப்புவின் படைகள் பாலக்காட்டை வென்று திருச்சூருக்கு வந்து சேர்ந்தன. இரு படைகளும் பெரியாற்றுக் கரையில் மோதின. தட்ப வெப்ப நிலையில் தடுமாறிய திப்புவின் படைகள் தோல்வியைத் தழுவ, திப்பு மேலூர் கோட்டைக்குத் திரும்பிச் சென்றார்.

திப்பு மீண்டும் பரவூரில் பெரும்படைகளுடன் போர் தொடுத்தார். ஆங்கிலேயப் படையுதவியுடன் திவான் எதிர்த்தார். இறுதியில் சமாதான ஒப்பந்தம் செய்யப்பட்டுத் திப்பு, படைகளுடன் மைசூர் திரும்பினார். திவான், வெற்றிப் பெருமிதத்தில் திருவனந்தபுரம் திரும்பினார். இதுதான் திவான் வெற்றியின் கதை.

திப்புவைத் திருப்பியனுப்பச் செய்த வரலாற்று நிகழ்ச்சி ராஜா கேசவதாசின் பெருமையை மேலும் உயர்த்தியது. இதனால் முதல் திவானாகத் திகழ்ந்த ராஜா கேசவதாஸ் சிறந்த படைத் தளபதியாகவும் அறியப்பட்டார் எனலாம்.

**தம்பிமார் கதையின் இணை வடிவங்கள்**

தம்பிமார் கதைப் பாடல் கதைத் திட்டத்தோடு மிகவும் நெருங்கியத் தொடர்புடைய இரண்டு கதைப்பாடல்கள் திருவிதாங்கூர் பகுதிகளில் வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கது. முதலாவது வலியதம்பி குஞ்சுதம்பிகதை. இது மலையாளத்தில் அருஞ்சுவடியாக உள்ளதாகத் தெரிகிறது.[12] மற்றொன்று தமிழிலுள்ளது; ஒட்டன் கதை என்பது அதன் பெயர். இவ்விரு கதைப் பாடல்களும் எவ்வாறு தம்பிமார்கதையின் மாற்றுவடிவங்களாகக் கருதப்பட்டன என்பதற்கு அதன் கதைத் திட்டங்களை அறிவது தேவையாகிறது.

**வலிய தம்பி குஞ்சு தம்பி கதை**

தம்பிமார் கதையின் மலையாள வில்லுப்பாட்டு வடிவமாக அமைவது இது. தெக்கன் பாட்டில் முக்கிய இடம் வகிக்கும் கதைப்பாடல் வடிவம். தம்பிமார் கதையிலுள்ள பெரும்பாலான நிகழ்வுகள் இதில் அப்படியே தரப்பட்டுள்ளதை ஜெ. பத்மகுமாரி தமது 'கதா கானங்களுடெ லோகம்' என்னும் மலையாள நூலில் எடுத்துரைப்பதைக் காணலாம்.[13]

அயோத்தியிலிருந்து அபிராமியும் அண்ணனும் வருதல், இராமவர்மா அபிராமியைத் திருமணம் செய்தல், தம்பிமாரின், கொச்சு மாடம்மையின் பிறப்பு, சோதிடனை அழைத்து ஜாதகம் கணித்தல், மன்னர் தீர்த்தமாடல், வைசூரி நோய்வாய்ப்பட்டு

இறத்தல், மார்த்தண்ட வர்மா ஆட்சிப் பொறுப்புப் பெறுதல், கொச்சு மாடம்மையை மன்னர் மணமுடிக்க விரும்பல், தம்பிமார் மறுத்தல், தம்பிமாரின் சொத்துக்களும் நிர்வாக உரிமையும் பறிக்கப்படல், தம்பிமார் அழகப்ப முதலியாரிடம் படையுதவி பெறல், தம்பிமார் நெல்லைப்படையுடன் மார்த்தாண்ட வர்மா மோதுதல், வர்மா புறமுதுகு காட்டிக் கோட்டைக்குள் ஓடி ஒழிதல், குதிரையில் தப்பி ஓடுதல், குஞ்சு தம்பி வெட்ட முயலுதல், முதலியார் தடுத்தல், முதலியாருக்கு பெரும் பொன்னும் பொருளும் கொடுத்து சமாதானத்திற்கு வர்மா தூண்டுதல், இரு கூட்டத்தாரும் சத்தியம் செய்தல், வர்மா வஞ்சகச் சூழ்ச்சியுடன் பொய்யாகச் சத்தியம் செய்தல், முதலியார், படையுடன் திரும்புதல், தம்பிமாரை முகம் காண்பிக்க மன்னர் அழைத்தல், நாகர்கோவில் கொட்டாரத்தில் வைத்து தம்பிமாரின் வாள்களை வாங்கி நிராயுத பாணியாக்கிக் காவலர்களால் வரிந்துகட்டி கழுத்தறுத்துக் கொல்லல், தம்பிமார், தாயார், தங்கை, மாமன் ஆகியோர் அலறி ஏங்கித் துடித்து உயிர்விடல் எனத் தம்பிமார் கதைப்பாடலின் மொத்த நிகழ்வுகளும் வலிய தம்பி குஞ்சுதம்பி கதைப் பாடலில் இடம் பெற்றமைகின்றன. ஆதலின் இதனை ஓர் உண்மையான, முழுமையான இணை வடிவம், மாற்று வடிவம் என்று குறிப்பிடலாம்.

### ஒட்டன் கதை

திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மாவுக்கும் ஆட்சியுரிமைக்குரியவர்களான தம்பிமாருக்கும் இடையே நடந்த பூசல்களையும் போராட்டங்களையும் கதைப்பொருளாகக் கொண்ட வரலாற்றுக் கதைப்பாடல் ஒட்டன்கதை.[14]

இக்கதைப் பாடலுக்கு 'ஒட்டன் பட்ட கதை' என்ற பெயரும் வழங்கப் படுகிறது. மன்னர் மார்த்தாண்ட வர்மாவின் ஆட்சிக் காலம் கி.பி. 1731 - 1758. ஆதலின் அக்காலத்திற்குப் பிறகு 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் இக்கதைப்பாடல் எழுந்ததாகக் கருதப்படுகிறது. செல்லரித்துச் சிதைந்தவை போக 298 வரிகளுடைய சுவடியே கிடைக்கப்பெற்றுள்ளது.[15]

பொத்தையடி தாணுமாலையர் எனும் ஊர்ப் பிரமுகரின் மேற்பார்வையில் வளர்ந்தவன் முண்டன். முண்டு எனும் கீழாடை உடுப்பவரையும் குள்ளமானவரையும் மலையாள நாட்டில் முண்டன் என்று கூறுவர். இவன் திருவிதாங்கூர் அரசின் ஓட்டக்காரனாக வேலை பார்த்துவந்தான். ஓடி ஓடி பல்வேறு இடங்களுக்குச் செய்திகளைச் சேர்ப்பதும் உளவு பார்த்து இரகசியமாகச் செய்திகளைச் சேகரிப்பதும் ஓட்டக்காரனின் வேலை. 'ஓட்டக்காரன்' என்பதே நாளடைவில் மருவி 'ஒட்டன்' ஆயிற்று என்பர். உளவு எனும் ஒற்று பார்ப்பதால் 'ஒற்றன்' என்பது 'ஒட்டன்' ஆகியிருக்கலாம்.

மன்னர் இராமவர்மாவின் இறப்பிற்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பேற்றவர் மருமகன் மார்த்தாண்டர். இதனால் மன்னரின் மக்களான வலிய தம்பி என்ற பப்புத் தம்பியும் சிறிய தம்பி என்ற இராமன் தம்பியும் வெறுப்பும் விரக்தியும் கொண்டனர். ஆட்சியில் செல்வாக்குப் பெற்றிருந்த எட்டு வீட்டுப் பிள்ளைமாரும், நிலப்பிரபுக்களான மாடம்பிமாரும், கோயில் நிர்வாகக் குழுவினரான யோகக்காரர்களும் ஏற்கனவே மன்னருக்கெதிராகச் செயல்பட்டு வந்தனர். இவர்களுடன் இணைந்து தம்பிமார், இளையவரான மன்னர் மார்த்தாண்ட வர்மாவைச் சதி செய்து கொல்லத் திட்டம் தீட்டி, திருவிதாங்கூரில் ஆங்காங்கே தம் படைவீரர்களை அனுப்பினர்.

மன்னர் திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தின் பல்வேறு இடங்களில், கோவில்களில் மாறுவேடந் தரித்து மறைந்து வாழத் தொடங்கினார். அவருக்குப் பொத்தையடி தாணுமாலையரும் கண்ணனூர் அனந்தன் நாடாரும் களரி ஆசான்களை அமர்த்தி பாதுகாப்பு நல்கி வந்தனர். ஒட்டன் முண்டன் ஆங்காங்கே நடக்கும் சூழ்ச்சிகளை வேவு பார்த்து வந்து தாணு மாலையரிடமும் அனந்தனிடமும் தெரிவிக்க, அவர்கள் தந்திரத்துடனும் தீரத்துடனும் அதை முறிடியத்து எதிரிகளை நசுக்கி வந்தனர்.

ஒரு தடவை எதிரிகளின் கவனத்தைத் திருப்பி, கல்குளம் கோட்டையைப் பிடிப்பதற்காக ஒட்டன் முண்டன், மார்த்தாண்ட

வர்மா மன்னரின் வேடமிட்டுத் தோவாளைப் பகுதிகளில் நடமாடினான்.[16] செய்தியறிந்த மாதவ மாடம்பி தலைமையிலான எதிரிகள் 'மன்னர் சிக்கிவிட்டார்' என்ற மகிழ்ச்சியில் மாறு வேடத்திலிருந்த ஒட்டனை வரிந்து கட்டிப் பல்லக்கில் கல்குளம் நோக்கிக் கொண்டு சென்றனர். இதே நேரத்தில் பொத்தையடி தாணுமாலையர், கண்ணனூர் அனந்தன் நாடார், மிடாலம் பீருக்கண்சாகிபு ஆதரவுடன் மன்னர் அரண்மனைக்குள் நுழைகிறார். பஞ்சவன்காட்டில் வைத்து நடைபெற்ற போரில் தம்பிமார் கோரமாக வெட்டிக் கொலை செய்யப்பட்டனர்.

கல்குளத்தில் நடைபெற்ற அசம்பாவிதங்களைப் பப்புக்குட்டன் எனும் தூதன் வந்து மாதவ மாடம்பியிடம் கூறினான். அங்குள்ள ஆயக்காரர்கள், பல்லக்கில் உள்ளவன் ஒட்டன் என்பதையும் அறிவிக்கின்றனர். ஆத்திரமும் தோல்வியும் கொண்ட மாதவ மாடம்பி வாளெடுத்து ஒட்டனைக் கண்டம் துண்டமாக வெட்டி வீழ்த்திவிட்டு விரைந்து தப்பிச் சென்றான். செய்தியறிந்த மன்னனும், தாணுமாலையரும் இரவிப்புதூர் வந்து ஒட்டனின் உடலைக் கண்டு கண்ணீர் விட்டனர். அரச மரியாதையோடு ஒட்டனின் உடல் பொத்தையடி சாலைக்குளம் இடிந்தகரையிலுள்ள மதுரம் சோலையில் தகனம் செய்யப்பட்டது.

தமக்கெதிராகச் செயல்பட்ட எட்டுவீட்டுப் பிள்ளைமார் எனும் நம்பூதிரிகள், மாடம்பிமார் எனும் நாயர்கள் ஆகியவர்களின் 42 குடும்பத்தினரை அரசர் கழுவிலேற்றக் கட்டளையிட்டார். இவர்களின் பெண்டு பிள்ளைகளைத் தேங்காய்ப்பட்டணம், முட்டம் பகுதியிலுள்ள மீனவர்களுக்கு ஏலம் போட்டு வழங்கினார். யோகக்காரர்களான பிராமணப் போற்றிகள் நாய்க்கோலம் வரையப்பட்டு நாடுகடத்தப்பட்டனர். தாணுமாலையருக்குப் பொன் கடயங்களும் வீரச்சங்கிலியும் இறையிலிப் பட்டயங்களும் வழங்கப்பட்டன.

கண்ணனூர் களரி வீரர் அனந்தன் நாடாரை அனந்த பத்மநாபன் என்ற பெயர் சூட்டித் தமது மெய்க்காவலராகவும் தளபதியாகவும் பணியமர்த்தினார் மன்னர். ஒட்டனுக்குப்

பொத்தையடியில் கோயில் எழுப்பப்பட்டது. ஒட்டக்காரசுவாமி கோயில் என்று அது அறியப்பட்டு வருகிறது.

ஒட்டன் கதை, தம்பிமார்கதையிலிருந்து சில இடங்களில் மாறுபாடு கொள்வது காணலாம். பிள்ளைமாரும் மாடம்பிமாரும் தம்பிமார்கதையில் மார்த்தாண்ட வர்மாவுக்கு ஆதரவாகக் காட்டப்படுகின்றனர். தம்பிமார் நாகர்கோவில் கொட்டாரத்தில் வைத்து சூழ்ச்சியுடன் கொல்லப்பட்டதாக தம்பிமார்கதை கூறுகிறது. தம்பிமார் கதையில் தம்பிமாரும் வர்மாவும் மட்டுமே முன்னிலைப் படுத்தப் படுகின்றனர். வர்மா எதிர்த் தலைவராகக் காட்டப்படுகிறார். ஒட்டன் கதையில் நேர்த் தலைவராக ஒட்டனும் முதன்மை மாந்தராக மார்த்தாண்ட வர்மாவும் அமைவது காணலாம். மட்டுமின்றி, பொத்தையடி தாணுமாலையரும் கண்ணனூர் அனந்தன் நாடாரும் முக்கியத் துணை மாந்தராகவும் அமைகின்றனர். திருவிதாங்கூர் வட்டார மக்களின் விருப்பத்திற்கேற்ப அக்காலம் வழங்கப்பட்ட கதையின் அடிப்படையில் ஒட்டன்கதை உருவாயிற்று எனலாம்.

**முடிவுரை**

நாகரிகம் தொடாத தொடக்கக் கால மக்களிடம் இயல்பாக எழுந்த கிராமிய இலக்கியமே நாட்டுப்புற இலக்கியம் என்பது சுட்டப்படுகின்றது. நாட்டு நகரத்திற்குப் புறத்தே அமைந்த ஊர்களில், கிராமப்பகுதிகளில் வாய்மொழியளவில் வழங்கப்பட்டு வருவதால் இவை நாட்டுப்புற இலக்கியங்கள் எனப் பெயர் பெற்றன என்பதும் எடுத்துரைக்கப்படுகிறது.

உழைக்கும் பாமர மக்கள் மாலை நேரத்தில் வேலையிலிருந்து திரும்பி ஓய்வெடுக்கும் வேளைகளில், மர நிழல்களிலும் வீட்டுத் திண்ணைகளிலும் பொழுது போக்கிற்காகக் கூடியிருந்து ஒருவர் இனிமையானக் குரலுடன் ஓசைமிகப் பாட, பலர் செவிமடுக்க, கதைப்பாடல் தோன்றலாயிற்று என்பது உணர்த்தப்படுகிறது. முற்காலத்தில் இத்தகையக் கதைப்பாடல்கள் கதாகாலட்சேபம் போன்றும் பிற்காலத்தில் வில்லுப்பாட்டுகளாகவும் அமைவது பாடிக் கேட்கும் இயல்பைச் சுட்டியமைவதாகக் கண்டறியப்படுகிறது.

தமிழ்க் கதைப்பாடல்கள் தெய்வ இதிகாச புராணம், சமூக குடும்பம் காதல், வரலாற்று வீரப்போர் எனும் முப்பெரும் தலைப்பில் அடங்குவனவாக அறிய முடிகிறது. இதில் வரலாற்றுப் போர்க்கதைப் பாடல்கள் கதை, அம்மானை, கும்மி, சிந்து, சண்டை, மாலை, படைப்போர், நாமா, கிஸ்ஸா ஆகிய வடிவங்களில் அமைவது ஆய்ந்தறிவிக்கப்படுகிறது. வரலாற்று வீரக்கதைப் பாடல்கள் பெரும்பாலும் அந்தந்தக் காலங்களில் நிகழ்ந்த பூசல்களையும் போராட்டங்களையும் கதைப் பொருளாகக் கொண்டு படைக்கப்படுவது எடுத்துரைக்கப் படுகிறது. இக்கதைப் பாடல்களில் அந்தந்தப் பகுதிகளில் வாழ்ந்த சாதனை வீரர்களே கதைத் தலைமை பெறுவதும் அடையாளங் காணப்படுகிறது.

கேரள வரலாற்று வீரப் போர்க் கதைப்பாடல்கள் தெக்கன் பாட்டுகள் என்ற பெயரில் தமிழிலும் மலையாளத்திலும் அமைந்து தென் கேரளத்தின் வரலாற்றை கதைப்பாடல்களில் தருவது ஆய்ந்தறியப்படுகின்றது.

வடக்கன் பாட்டுகள், வீர மாப்பிளா பாட்டுகள் ஆகிய பெயர்களில் மலையாளத்தில் வீரக்கதைப் பாடல்கள் அமைவதும் எடுத்துக் காட்டப்படுகிறது. தமிழிலுள்ள கேரள வரலாற்றுக் கதைப் பாடல்கள் தெற்குக் கேரளப் பகுதியான திரு விதாங்கூரில் நிகழ்ந்த வரலாற்று நிகழ்வுகளின் அடிப்படையில் எழுந்துள்ளதும் கண்டறியப்படுகிறது. முக்கிய திருவிதாங்கூர் வரலாற்றுக் கதைப்பாடல்களான இரவிக்குட்டிப்பிள்ளை போர், வெங்கலராசன் கதை, திவான் வெற்றி ஆகியவற்றின் கதைத் திட்டம் அறிமுகப்படுத்தப்படுகிறது.

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தம்பிமார் கதை, கதைப்பாடலின் இணை வடிவமாக மலையாளத்தில் வலிய தம்பி குஞ்சு தம்பி கதை என்னும் கதைப்பாடல் ஏட்டுச் சுவடியாக உள்ளதும் கூறப்படுகிறது. இதன் கதைத்திட்டம் தம்பிமார் கதையை முழுமையாக ஒத்துப் போவதும், இது தம்பிமார் கதையின் மாற்று வடிவமாக அமைவதும் ஆய்ந்து கூறப் படுகிறது. தம்பிமார் கதையோடு மிகவும் நெருங்கியத்

தொடர்புடைய ஒட்டன் கதை தமிழில் உள்ளதும் உரைக்கப் படுகிறது. இக்கதைப்பாடல் சில நிகழ்வுகளிலும் கதை மாந்தர் அமைப்பிலும் தம்பிமார் கதையிலிருந்து விலகிச் செல்வதும் கண்டறியப்படுகிறது. வட்டார மக்களின் விருப்பத்திற்கேற்ப அந்தந்தக் கதைகள் அமைவதால் இந்த நழுவல்கள் ஏற்பட்டதாக முடிவு கூறப்படுகின்றது.

## குறிப்புகள்

1. பெருமாள். அ.நா., தமிழில் கதைப்பாடல், ப. 3
2. பத்மகுமாரி. ஜெ, கதா கானங்ஙளுடெ லோகம் (மலை), ப. 34
3. லூர்து. தே, நாட்டார் வழக்காறுகள், ப. 79
4. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 48
5. மேலவர், மேலது, ப. 127
6. லூர்து. தே, முன்னது, ப. 89
7. திருவிக்கிரமன் தம்பி. ஜி, தெக்கன்பாட்டுகள் - ஒரு படனம் (மலை), ப. 14
8. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், முன்னது, ப. 15
9. மேலவர், மேலது, ப. 28
10. பெருமாள். அ.நா., முன்னது, ப. 231
11. பரமேஸ்வரன் பிள்ளை. பி.ஆர்., ராஜா கேசவதாஸ் (மலை), ப. 40
12. பத்மகுமாரி. ஜெ, முன்னது, ப. 91
13. மேலவர், மேலது, பக். 92-99
14. பெருமாள். அ.நா, முன்னது, ப. 234
15. சர்வேஸ்வரன். ப. (பதிப்பர்) ஒட்டன்கதை, நுழைவாயில், ப. 13
16. மேலவர், மேலது, ப. 17

# இயல் - மூன்று

# வடிவ அமைப்பும் மொழி அமைப்பும்

## முன்னுரை

எந்தவோர் இலக்கிய வடிவமாக இருந்தாலும் அதற்கென ஓர் அமைப்பு முறை உண்டு. வடிவ அமைப்புக் கூறுகள் முறையாக அமைந்தாலே அந்த நூல் முழுமை பெற்றதாகக் கருத முடியும். நூலின் ஒருமுகப் போக்கிற்கும் அகப்புறக் கட்டமைப்புக்கும் வடிவமும் மொழி நடையும் இன்றியமை யாததாகும். காப்பு, வணக்கம், வாழ்த்து, நூல்பெயர்க் குறிப்பு, ஆசிரியர் குறிப்பு, காலக் குறிப்பு, பா அமைப்பு, இறுதி வாழ்த்து, பயண ஊர்ப் பட்டியல் ஆகியவை வடிவ அமைப்புக் கூறுகளாக இடம் பெறுகின்றன. சொல்லமைப்பு, அந்தாதி, திரும்ப வரல், அடுக்கி வரல், உரைக் குறிப்பு, உரையாடல், ஓசை அமைப்பு, வருணனை, உவமைகள் ஆகியவை மொழி அமைப்புக் கூறுகளாக அமைகின்றன.

## வடிவ அமைப்பு

ஒரு நூலின் வடிவ அமைப்புக் கூறுகள் சரியான முறையில் அமைந்தால்தான் அந்த நூல், உருவாக்கத்தில் வெற்றி பெற்றதாகக் கருத முடியும். அந்த நூலின் முறையான போக்கிற்கும் கட்டுக்கோப்பிற்கும் நூல் வடிவ அமைப்பு முக்கியமானது எனலாம். காப்பு, வணக்கம், வாழ்த்து, நூல் பெயர்க் குறிப்பு, ஆசிரியர் குறிப்பு, காலக் குறிப்பு, பா அமைப்பு,

இறுதி வாழ்த்து, பயண ஊர்ப் பட்டியல் ஆகியவை வடிவ அமைப்புக் கூறுகளாக அடையாளங் காணப்படுகின்றன.

## காப்பு அமைப்பு

நூல் வடிவ அமைப்புக் கூறுகளில் முதலாவதும் முக்கியமானதும் ஆகும் காப்பு தேடுதல். ஒவ்வொரு கதைப் பாடலும் காப்பு வேண்டுதலோடு தொடங்கப்படுவது மரபு. தம்பிமார் கதை சிறப்பாக அமைய வேண்டியும், வில்லுப் பாட்டாகப் பாடி நிகழ்த்தும்போது பாதுகாவல் தேடியும் காப்பு தேடுவதைக் காணலாம்.

**சீர் பெறும் கதையைப் பாட**
**செந்தில் வாழ் கந்தன் காப்பதாமே![3]**
**மின்னெனும் உமையாளீன்ற**
**விநாயகன் குலத்தினாலே[4]**
**உந்தன் வேலுண்டு வினையில்லை[5]**

ஆகிய பாடல் வரிகள் முருகன், விநாயகன் ஆகியவர்களிடம் காப்பு தேடும் பாங்கினைச் சுட்டி அமைவனவாகும்.

## வணக்கம் வாழ்த்து அமைப்பு

வணக்கமும் வாழ்த்தும் நூலமைப்புக் கூறுகளில் சார்ந்ததாகும். கதைப் பாடல்களில் காப்போடு இணைந்து கடவுள் வணக்கமும் துதியும் இடம் பெறுவது இயல்பு.[6] தம்பிமார் கதையின் தொடக்கத்தில் வணக்கமும் அதோடு சார்ந்து வாழ்த்தும் இடம் பெறுவது காணலாம்.

**சீர்பெறும் கயிலை மேவி**
**சிவனுடை பாதம் சேர்ந்தால்**
**பேர் பெறும் உலகு தன்னில்**
**பெரும்பகை மீறி தம்மில் வார்பெறும்[7]**

எனும் பாடல் வரிகளில் சிவன் வணக்கத்தோடு வாழ்த்தும் இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது. நூலுருவாக்கம் சரியாக அமையவும் பாடப்படும்போது தடையின்றிச் சிறக்கவும் இத்தகைய கடவுள் வணக்கமும் வாழ்த்தும் இடம் பெறுகிறது எனலாம்.

## நூற்பெயர் அமைப்பு

நூலின் வடிவ அமைப்புக் கூறுகளில் ஒன்று நூற்பெயர் நுவலுதல். இது நூலின் தொடக்கப் பகுதியில் அமைவதாகும். தம்பிமார் கதையிலும் வணக்கம் பகுதியில் நூற்பெயர் சுட்டிச் செல்வதைக் காணலாம்.

**தம்பிமார்கள் வங்குலை யிறந்துபட்ட**
**சீர் பெறும் கதையைப் பாட[8]**
**தானென்றும் ஆண்டிருந்த**
**தம்பிமார் கதையைப் பாட**
**பொன் னெனும் கிருட்டிணத்தாளம்மை**
**புகழ் பெற வளர்த்த செல்வர்**
**மன்னரால் குலைகள் பட்ட**
**கதையை வளம் பெறக் கூற[9]**

என்னும் பாடல் வரிகளில் நூல் பெயரோடு கதைக்கருவும் குடும்பச் சூழலுடன் குறிப்பிடப்படுவது காணலாம். இக் குறிப்பிலிருந்து வாசகர்கள் நூற்பெயரோடு முக்கிய கதை நிகழ்ச்சியையும் புரிந்துகொள்ளும் அளவுக்கு நூற்பெயர்க் குறிப்பு அமைக்கப்பட்டுள்ளது எனலாம். கதைப் பாடலின் இறுதியில் இடம்பெறும் நூற்பெயர் பற்றிய மற்றொரு குறிப்பு இக்கதைப்பாடலுக்குப் 'புதுக்கூட்டத்துவாதை' என்ற பெயரும் உண்டு என்பதைக் சுட்டியமைவது குறிப்பிடத்தக்கது.[10]

மன்னரால் கொலை செய்யப்பட்ட தலைமைக்கதை மாந்தரான தம்பிமாரும், துயரம் தாங்க முடியாமல் தற்கொலை செய்த தாயார், தங்கை, மாமா ஆகியவர்கள் கயிலாயம் சென்று மகாதேவர் அருள் பெற்று, குட்டித் தெய்வங்களாக மாறிய நிலையை இது சுட்டிச் செல்வதாகும்.

## ஆசிரியர் பெயர் அமைப்பு

கதைப் பாடல்கள் பொதுவாகப் பரம்பரை பரம்பரையாக வாய்மொழியளவில் பாடப்பட்டு வருவதால் ஆசிரியர் பெயர் சுட்டிக் குறிப்பிடப்படுவதில்லை. எனினும் இக்கதைப் பாடலை

முதலில் உருவாக்கியவர் ஒருவர் கட்டாயமாக இருந்திருத்தல் வேண்டும். மரபு கருதி அவர் தம் பெயரைக் குறிப்பிடாமல் போயிருக்கலாம்.

காலாகாலங்களில் இக்கதைப்பாடலைப் பாடும்போதும் படியெடுக்கும்போதும் பல மாற்றங்கள் நிகழலாம். ஆசிரியர் பெயரின்மை இக்கதைப்பாடலின் வாய்மொழி யிலக்கியப் பண்பை மேன்மேலும் மெருகூட்டி அமைப்பதாகும் எனலாம்.

## காலக்குறிப்பு அமைப்பு

தம்பிமார் கதைப்பாடலின் தொடக்கத்தில் கதைப் பாடல் எழுந்த காலம் பற்றிய குறிப்பு இடம் பெறாமல் போயினும் நூலிறுதிப் பகுதியில் சில வரிகள் மாய்ந்துபோக, “புதன்கிழமை முடிந்தது” என்ற குறிப்பு இடம் பெறுவது காணலாம்.[11] விடுபட்ட வரிகள் ஏட்டின் பழமையால் மாய்ந்து போயிருக்கலாம் என்றும் அதில் ஆண்டு, மாதம் உட்பட்டிருந்திருக்கலாம் என்றும் கருதுவர் பதிப்பாசிரியர்.[12] ஆனால் இது படியெடுத்த காலமாவதற்கும் வாய்ப்புண்டு.

கதையைப் பாடிக் கேட்டலே முக்கிய நோக்கமாதலின் எழுதிய காலத்தை ஒதுக்கியிருக்கலாம் என்பதும் கருதுகோள். மார்த்தாண்டவர்மாவின் ஆட்சி காலமான கி.பி. 1729-58 காலத்தைத் தொட்டு இந்நூல் எழுந்திருக்கலாம் என்பது கணிப்பு. காலக் குறிப்பின்மை இக்கதைப் பாடலின் காலத்தை முன்னோக்கிச் செலுத்துவதும் நினைக்கத்தக்கது.

## பா அமைப்பு

பா அமைப்பு வடிவ அமைப்பின்பாற்பட்டதாகும். நாட்டுப்புற இலக்கியங்களில் பா அமைப்பு பா வடிவிலும் வரி வடிவிலும் இடம் பெறுவதுண்டு. தம்பிமார் கதை தனித்தவகைப் பாக்களால் ஆனதல்ல. நீட்சியுடைய நெகிழ்ச்சியான தொடர் வரிகளால் ஆனது. இதில் மொத்தம் 1880 வரிகள் உள்ளன. சில வரிகள் சிதைந்தும் குறைந்தும் காணப்படுகின்றன. சீர்களும் ஒரே சீராகவன்றிச் சில அடிகளில் குறைந்தும் சில அடிகளில் மிகுந்தும் காணப்படுகின்றன.

பாமரப் படைப்பாளிகள் ஆதலின் பாடுவதற்கேற்ற எளிமையான ஓசையான வரிகளைத் தேர்ந்தார்களே தவிர முழுமையான யாப்பு முறையிலுள்ள பாவினங்களைப் பயன் படுத்தவில்லை எனலாம்.[13] அவ்வப்போது வில்லுப்பாட்டாகப் பாடுவதற்குப் பயன்படுத்தப்பட்டு வந்ததால் வரிகள் சிதைந்தும் மாய்ந்தும் போயிருக்கலாம் என்பதும் முடிபு.

## இறுதி வாழ்த்து அமைப்பு

கதைப் பாடல்கள் பொதுவாக, கதை முடியும் தறுவாயில் இறுதியாக வாழ்த்து பாடி முடிப்பது மரபு.[14] தம்பிமார்கதையில் இறுதி வாழ்த்து நேரடியாக இடம்பெறவில்லை யாயினும் வேறு வடிவில் இடம் பெறுவது காணத்தக்கது. இறுதிப்பகுதியில் 1810 வரி முதல் 1880 வரையிலான 70 வரிகள் வரை தம்பிமாரும் கூட்டத்தாரும் ஈஸ்வரனை வழிபட்டு வாழ்த்தி வரம் பெற்ற நிகழ்ச்சி சித்திரிக்கப்படுவது காணலாம்.

**மகாதேவரை தொழுது**
**வரம் வாங்கி நின்றாரே[15]**
**அரனே சிவனே யென்று**
**அக்கினி மண்டபம் தனை தாங்கி**
**வந்தீரே தம்பிமாரே யென்று**
**ஈஸ் பரனார் மனம் மகிழ்ந்து**
**எதிரில்லா வரம் தருவேன்**
**இப்போது பூசை பண்ண**
**கொல்ல வரம் வெல்ல வரம்**
**புகழ் பெறவே வரம் கொடுத்தார்.[16]**

இவ்வரிகள் வாழ்த்தும் வரமும் பற்றி அமைவதால் இறுதி வாழ்த்திற்குப் பதிலாக அமைந்தது என கருதுதற்கிடமுண்டு.

## பயண ஊர் நிரல் அமைப்பு

நாட்டு நகர வளம் பாடுதல் இலக்கியங்களின் பொது இயல்பாகும். கதைப்பாடல்களில் அதற்கு ஈடாகப் படைகள் கடந்து செல்லும் ஊர்களை நிரல்படுத்துவது காணலாம்.

தம்பிமார் கதைப்பாடலில் இது போன்ற பயண ஊர் நிரல் காட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

**வேம்படி வாள் கோவில் விட்டு**
**விரைவாக வழி நடந்து**
**வள்ளியாறு தனை விட்டு**
**வாய்த்த ஏலாதான் கடந்து**
**ஈழவன் மடமும் விட்டு**
**ஏத்த சாலை வழியாக**
**வெள்ளங் கெட்டி மடமும் விட்டு**
**வீறு வீறாய்த் தான் கடந்து**
**கள்ளியாங் காடு விட்டு**
**கணியாங் குளம் கடந்து**[17]

அழகப்ப முதலியாரைக் கண்டு படையுதவி வேண்டப் புறப்பட்ட தம்பிமார்களின் கூட்டம் தாண்டிய ஊர்கள் இவ்வாறு பட்டியலிடப்படுவது காணலாம்.

அபிராமியும் அண்ணன் கிருட்டிணனும் அயோத்தி யிலிருந்து சுசீந்திரம் வரல், சுசீந்திரத்திலிருந்து மன்னர் நாகர்கோவில் கொட்டாரத்திற்கு வரல், வாலியான் பாறைச் சங்கமத்தில் வர்மா தீர்த்தமாடச் செல்லல், அம்மாமனின் வீட்டிற்கு வர்மா பயணம் செய்தல், அழகப்ப முதலியாரின் திருவிதாங்கூர் பயணம், மார்த்தாண்ட வர்மாவிடம் தம்பிமார்கள் முகம் காண்பிக்கச் செல்லல் ஆகிய இடங்களிலும் இதுபோன்ற பயண நிரல் தரப்படுகின்றன. இத்தகைய அமைப்பு கதை நீட்சிக்கும், கட்டுக்கோப்பிற்கும் துணைபுரிவது காணலாம்.

## மொழி அமைப்பு

ஒவ்வொரு படைப்பிற்கும் அதன் வகைக்கேற்ப, ஆசிரியரின் உளநிலைக்கேற்ப ஒரு மொழியமைப்பு அமையும். கதைப் பாடல்கள் பாமர மக்களின் தேவைக்கேற்ப எழுந்த இலக்கியமாதலின் நாட்டுப்புற மொழியமைப்பையே பெறும்.[18] மொழியமைப்பு தெளிவோடும் எளிமையோடும் இனிமையோடும் அமைந்தால் கருத்துப் புலப்பாடு விறுவிறுப்பாக அமையும்.

தம்பிமார் கதைப்பாடலின் மொழியமைப்பிற்குத் துணை செய்யும் சொல்லமைப்பு, தொடரமைப்பு, அந்தாதியமைப்பு, உரையாடல் அமைப்பு, ஓசை அமைப்பு, வருணனை அமைப்பு, உவமைகள் அமைப்பு ஆகியவை ஈண்டு கண்டறியப்படுகின்றன.

### சொல்லமைப்பு

பாமரர்கள் எளிதில் புரிந்துகொள்ளுமாறு அவர்களது நடையில் கதைப்பாடல்கள் அமைவது இயல்பு.[19] மொழிநடை அமைப்பிற்குச் சொல்லமைப்பு முக்கியப் பங்கு வகிக்கிறது. எழுந்த சூழ்நிலைக்கேற்ப, வகைக்கேற்ப சொல்லாட்சியில் அமைப்பு நிகழும். மலையாள மொழியோடு தொடர்புடைய நாட்டுப்புறத் தெக்கன் பாட்டாக அமைவதால் தம்பிமார் கதையில் மலையாளச் சொற்கள், வழக்குச் சொற்கள், அடுக்குத் தொடர், ஒலிக் குறிப்புச் சொற்கள் ஆகியன இடம்பெற்றமைவது காணலாம்.

### மலையாளச் சொற்கள்

தம்பிமார் கதை தமிழ் - மலையாளப் பகுதியான திருவிதாங்கூரில் எழுந்தது. ஆதலின் பல மலையாளச் சொற்கள் இதில் பயின்று வருவது காணலாம். குஞ்சு, கல்பித்த, கவணி, முண்டு, கெற்பம், ஆயான், பாசை, பம்மி, கச்சப்பிறம், சேவித்து, ஏலா, பறஞ்ஞுது, பட்சி, கரயாளர், உண்டை, கைவசம், பரத்தி, கூடிக்காழ்ச்ச, தற்கம், நமஸ்கரித்து, அரச கல்ப்பனை, திவசம், அவிடம், சதிவு, சுமடு, ஆறாட்டு பாதிராவு, அரும, சந்தோசம், தட்டான், திருமேனி, தம்புரான், கிறுபை, வாத்தியார், முதலெடுப்பு, பண்டு, பிச்சி, விஸ்த்தாரம், பிரதானி, தெக்கு, சாத்திரை, கிறுக்கன், வார்த்தை, அடவு, நிங்ஙள், குஞ்சுங்கள், முளிக்க, பிச்சாத்தி, ஆசாரம், அம்மாமன், ராவு, சங்கடம், விசாரம், நிரத்தி, உடுப்பு, தற, உறப்பு ஆகிய மலையாளச் சொற்கள் இக்கதைப் பாடலில் கலந்து வருவதைக் காணலாம்.

### வழக்குச் சொற்கள்

நாட்டுப்புற இலக்கியங்களில் அந்தந்த வட்டாரத்தில் வாழும் மக்கள் பயன்படுத்துகின்ற வழக்குச் சொற்கள் பல

இடம்பெறுவது தவிர்க்கவியலாததாகும். தம்பிமார் கதைப் பாடலிலும் திருவிதாங்கூர் வட்டார மக்களின் வழக்குச் சொற்கள் சில இடம் பெற்றமைவது காணலாம். இவை சிதைந்தும் மருவியும் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கது. குலை (கொலை), மாத்தானை (மாற்றானை), உரும (உரிமை), குடுக்கல் (கொடுக்கல்), மல்ப்போர் (மற்போர்), துகை (தொகை), காச்சல் (காய்ச்சல்), ஆனை (யானை), பிளை (பிழை), சுத்தி (சுற்றி), வளி (வழி), புகள் (புகழ்), தொளுது (தொழுது), பல்லாக்கு (பல்லக்கு), அவத்தம் (அபத்தம்), கோளி (கோழி), சீலை (துணி), சதிவு (சதி), குதவளை (குரல்வளை), மோச்சம் (மோட்சம்), கிளிமொளி (கிளிமொழி), தளுகி (தழுவி), அஞ்சு (ஐந்து), ஆளி (ஆழி), வாள்க்கை (வாழ்க்கை), ஊளி (ஊழி), களுவி (கழுவி) ஆகிய சொற்கள் வழக்குச் சொற்களாக வந்து நாட்டுப்புற வட்டார மொழியின் தாக்கத்தினைக் காட்டி நிற்கின்றன எனலாம்.

## அடுக்குத் தொடர்கள்

நாட்டுப்புறப்பாடல்கள் பாடப்படுவதற்குரியன ஆதலின் ஓசையை மிகுவிக்கும் அடுக்குத் தொடர்கள் அதில் அமைவது இயல்பு. தம்பிமார் கதையிலும் ஆங்காங்கே சில அடுக்குத் தொடர்கள் வந்து போவது காணலாம். கண்ட கண்ட, பிழை பிழை, பம்மிப் பம்மி, பத்தி பத்தி, வகை வகையாய், விறு விறு, கேளும் கேளும், வாரும் வாரும், மாறி மாறி, கோடி கோடி, பாரு பாரு போன்ற அடுக்குத் தொடர்கள் வந்தமைகின்றன. இவை கருத்து விளக்கத்திற்கும் சந்த இயைபிற்கும் துணை செய்கின்றன எனலாம்.

## ஒலிக் குறிப்புச் சொற்கள்

பொருளற்றன வாயினும் ஒலிக்குறிப்புச் சொற்கள் கருத்து விளக்கத்திற்கும் ஓசை மிகுவிப்பிற்கும் துணை செய்வதாகும். தம்பிமார் கதையில் சில இடங்களில் ஒலிக்குறிப்புச் சொற்கள் பயன்படுத்தப்படுவது காணலாம். மொகு மொகு, பர பர, வெடு வெடு போன்ற ஒலிக்குறிப்புச் சொற்கள் சில இடங்களில் மீண்டும் வந்து ஓசையை மிகுவித்துச் செல்வது காணக் கிடக்கின்றன.

## தொடரமைப்பு

சொல்லமைப்பைப் போல் தொடரமைப்பும் மொழியமைப்பிற் குத் துணை செய்வதாகும். ஆதலின் பாடப்படும் கதைப் பாடல் களின் ஆசிரியர் தொடரமைப்பில் பெருங்கவனஞ் செலுத்துவர். ஓசைக்குத் தொடரமைப்புக் கூறுகள் உதவி புரிவனவாகும். வாக் கியங்களில் வரும் தொடர்களில் அமையும் இத்தகைய அமைப்பு உத்திகள் நாட்டுப்புறயியல் கூறுகளாகவும் கருதத்தக்கனவா கும். திரும்ப வருதல், அடுக்கி வருதல், உரைநிலை ஆகியவை வாக்கியத் தொடர்களில் அமையும் அமைப்புக் கூறுகளாகும்.

## திரும்ப வரும் அமைப்பு

ஒரு சொல்லோ, தொடரோ ஒரே வரியிலோ அடுத்த வரியிலோ திரும்பவும் வருதல் திரும்ப வரும் அமைப்பிற்கு எடுத்துக்காட்டாக அமைவதாகும்.[20] தம்பிமார் கதைப்பாடலில் இந்தத் தன்மையைக் காணலாம்.

**முன்வாறும் பொன்னாலே**
**பின்வாறும் பொன்னாலே[21]**
**ஆயானுக் கப்போது**
**ஆயானுக் கடி கொண்டபோது[22]**
**வெள்ளித் தடிக்காரர் பட்டன் மாரும்**
**விரைந்துச் செல்லச் சேவுகரும்**
**திட்டனவே பட்டன் மாரும்**
**தெருவதுவும் தான்கடந்து[23]**

சொல்லும் தொடரும் ஒரே வரியிலும் அடுத்த வரிகளிலும் மீண்டும் வருதலுக்கு இவை எடுத்துகாட்டாக அமைவனவாகும். இத்தகைய திரும்பி வரும் அமைப்புகள் கருத்து விளக்க அழுத்தத்திற்கும் கேட்போர் சுவை ரசனைக்கும் ஆக்கம் தருவனவாகும்.

## அடுக்கி வரும் அமைப்பு

வாய்மொழிக் கதைப்பாடல்களின் தொடர்கள் மீண்டும் மீண்டும் அடுக்கி வருதல் என்பது பொதுவாக அமைவதாகும்.

இவை அடையெடுத்த பெயர்த் தொடர்களாகவும் அமைவதுண்டு என்பர்.[24]

**கோவில் வாசல் நடையில் கிடத்தியே**
**கொற்றவனுக்குக் கெதிராளி நீயடா!**
**மாறி மாறி பறைஞ்சது நீயடா!**
**வலுப் பேச்சுகள் பேசுவது நீயடா!**
**மண்ணுள்ள கால மட்டும்**
**வாழ்வேனென்று சொன்னதும் நீயடா![25]**
**பதினொன்றில் கொல்லும் வித்தும்**
**பதினெட்டில் கொல்லும் வித்தும்**
**பன்னிரண்டில் கொல்லும் வித்தும்**
**பதினாறில் கொல்லும் வித்தும்![26]**

மேற்கண்டவாறு அடையெடுத்தத் தொடரும் அடையெடுக் காத தொடரும் தம்பிமார் கதையில் அடுக்கி வருவது காணக் கிடக்கின்றது. இத்தகையத் தொடரமைப்பு சொல்ல வந்த செய் திக்கு முக்கியத்துவம் அளித்து வாசகர் மனத்தில் அதை ஒலி நயத்தோடு பதியவைப்பதற்கு மீண்டும் மீண்டும் முயல்வதை நாம் காண முடியும்.

## உரைநிலை அமைப்பு

கதையை ஆற்றொழுக்காகச் சொல்லிச் செல்லும் பாடகன் திடீரென்று காட்சி மாற்றம் செய்ய சில உத்திகளைக் கையாள் வான். இதற்குச் சில உரைநடை இணைப்புச் சொற்கள் பயன் படுவதுண்டு. வாய்மொழி வில்லுப்பாட்டான தம்பிமார் கதை யிலும் இந்த உரைநிலைக் குறிப்பு அமைப்பினைக் காண முடியும்.

**இப்படி யெழுதினங்கள் இசலாகக் கண்டபோது[27]**

**இருக்கு மந்த வேளையிலே யீஸ்பரனார் திருவருளால்[28]**

**இப்படியே யிருபேரும் யேற்ற மன்னர் திருக்கையால்[29]**

**என்று சொல்லி தங்கையரும் ஏந்திழையாள் தாயாரும்[30]**

மேற்கண்ட வரிகளின் தொடக்கத்தில் அமையும் உரைநிலைக் குறிப்புகள் இணைப்புச் சொல்லாகத் தொடர்களில் அமைந்து

கதைத் தொடர்ச்சிக்குக் கண்ணியாகவும் கதை தாவிச் செல்வதற்குப் படியாகவும் அமைவது குறிப்பிடத்தக்கது.

### அந்தாதி அமைப்பு

பா அமைப்புத் தொடர்பானது அந்தாதி அமைப்பு. ஒருவரியின் இறுதியில் முடியும் தொடரோ சொல்லோ அடுத்த வரியின் தொடக்கத்தில் வருவதே அந்தாதி. அதாவது அந்தம் எனும் இறுதிப்பகுதி ஆதி என்னும் தொடக்கப்பகுதியாவது. தம்பிமார் கதைப்பாடலில் பல இடங்களில் இத்தகைய அந்தாதி பா அமைப்பினைக் காணலாம்.

**மூன்று முகம் ஒரு முகமாய்**
**முளைத் தெழுந்த தாணுலிங்கம்**
**தாணுலிங்கம் தன்னையுமோ**
**தையல் நல்லாள் கை தொழுது**[31]
**சென்ற படை வீட்டில்**
**மன்னர் திருமேனிதான் சடைந்து**
**திருமேனிதான் சடைந்து**
**திருவிளங்கள் பற்றிவிட்டார்**[32]
**திருமேனி காவலாக சிறந்ததோர்**
**தம்பிமார் சேவிக்கவே**
**சேவிக்க இடது பிறம்**
**சிறந்த குஞ்சு தம்பி சேவிக்கவே**[33]

இத்தகைய பல அந்தாதி அமைப்புகள் தம்பிமார் கதைப்பாடலில் இடம் பெற்றுள்ளன. கருத்து விளக்கம் அழுத்தம் பெறுவதற்கும் இனிமையான ஓசையமைப்பிற்கும் துணை புரிவதால் அந்தாதி அமைப்புகள் பல பயன்படுத்தப்பட்டன எனலாம்.

### உரையாடல் அமைப்பு

இலக்கியங்களில் அமையும் கதை மாந்தர் உரையாடல் அமைப்பு மொழியமைப்பின்பாற் பட்டதாகும். இவை இயல்பான ஒரு மொழியமைப்பை உருவாக்குவதோடு உணர்ச்சிபூர்வமான ஒரு நாடகத் தன்மையையும் உருவாக்குவது குறிப்பிடத்தக்கது.

தம்பிமார் கதைப்பாடலில் சில இடங்களில் உரையாடல் அமைப்பு இடம் பெற்றமைவது காணலாம்.

**வாரும் எந்தன் தம்பிமாரே**
**வார்த்தை யொன்று சொல்லக் கேளும்**
**வரிசையுள்ள சிங்க நல்லூர் படைவீட்டில்**
**வந்துதித்த கொச்சு மணித்தங்கை**
**நிங்ஙளொடு பிறந்த நேசமுள்ள தங்கையரை**
**நேசமுடன் பரிவட்டங்கள் கொடுக்க**
**நிச்சயமாய் தரவேணும்**[34]

மார்த்தாண்ட வர்மா தமது மாமன் மகளும் முறைப் பெண்ணுமான கொச்சுமணி மாடம்மையை மணமுடிக்க வேண்டி மைத்துனர்களான தம்பிமார்களிடம் கூறியவை இவை. இதற்குப் பதிலாகத் தம்பிமார் கூறியவை இவ்வாறு :

**இல்லமென்றும் துருவ மென்றும்**
**இரண்டு வகை யுண்டல்லவோ?**
**இணக்கமில்லா கல்பித்தீரே மன்னா**
**இவ்வுலகில் முறைமைகளும் உண்டே**[35]

இத்தகைய உரையாடல் காட்சிகள் இயற்கையான ஒரு மொழியமைப்பையும் நாடகக் காட்சியமைப்பையும் தருவன வாகும். கேட்போர் செவிகளுக்கு மட்டுமின்றி கண்களுக்கும் விருந்தளிப்பவையாகும் எனலாம்.

## ஓசையமைப்பு

மொழிநடையமைப்பில் ஓசையமைப்பிற்கு முக்கிய இடமுண்டு. கதைப் பாடல்கள் பாமரர்களுக்காகப் பாடப் படுபவை. காதுகளுக்கு இனிமையாக அமைந்து நெஞ்சைப் பிணிப்பவை. இதற்கு வரிகளில் அமையும் ஓசை, ஒலிநயம், இயைபு ஆகியவை காரணமாகின்றன.[36] இத்தகைய சந்த அமைப் பினைத் தம்பிமார் கதைப்பாடலிலும் காணலாம்.

**கைமுறைகள் பூட்டுற முறையும்**
**காலுகள் மாறி தட்டுற முறையும்**

வர்ணத் தட்டு தட்டுற முறையும்
மறுபடி சென்று யெழும்பிற முறையும்[37]
பறிக்க வேணும் எடுத்த வகை
பாருலகை ஆள வேணும்
மூன்று நாளானும் யிந்த
ராச்சியத்தை ஆள வேணும்[38]
திரு வெழுத்து தான் படிக்க
சிறந்த தொரு தம்பிமார்கள்
திரு வடிவைத் தான் தொழுது
கண்டு இருந்தாரே தம்பிமார்கள்[39]
அரி சிறி கணபதி அரி ஓம் ஓமெனவே
அரி விரி ஓடும் கையில் கொடுத்தவர் சொல்வார்[40]

தொடக்கம், இடை, இறுதிப் பகுதிகளில் ஒரே சொல்லும் தொடரும் வருவதும், எதுகை மோனையுடன் அமைவதும் ஓசைநயத்தை உருவாக்குவது காணலாம். இத்தகைய சந்த அமைப்பு கேட்போருக்கும் பாடுவோருக்கும் சலிப்பையகற்றி இனிமை நல்கும் தன்மையன எனலாம்.

## வருணனை அமைப்பு

கதைப்பாடல்கள் எடுத்துரைத்துப் பாடி விவரிக்கும் பாங்கில் அமையும் இலக்கியமாதலின் விளக்கியுரைக்கும் வருணனைகள் பல இடம் பெற்றமைவதுண்டு.[41] இத்தகைய வருணனைகள் கதை நிகழ்ச்சிகளுக்குச் சுவை சேர்ப்பதோடு கதை நீட்சிக்கும் துணை செய்வனவாகும். தம்பிமார் கதையில் பயணங்கள், ஆடை அணிகலன் பூணுதல், போர் நிகழ்ச்சிகள் ஆகியவற்றில் பலவித வருணனைகள் இடம் பெறுவது காணலாம்.

கஞ்சியிட்ட கவணிகளும் கச்சையிட்ட உறுமாலும்
கஞ்சியிட்ட வேட்டிகளும் கம்பிக்கர வேட்டிகளும்
கயிக்கு வீரச் சங்கிலியும் கல் வையித்த மோதிரமும்
கோறத் திட்ட முடுவுகளும் கூண்ட நல்ல வலிய
தம்பி

**விலைமதிக்க வொண்ணாத வீரவாளிப் பட்டுடுத்து**
**மாந்தளிர் நிறப்பட்டுடுத்து வலிய தம்பி மன்னவரும்**[42]

மார்த்தாண்ட வர்மா வஞ்சகச் சூழ்ச்சியுடன் அழைக்க, கள்ளம் கபடம் அறியாத வலியதம்பி மன்னரிடம் முகம் காண்பிக்கச் செல்லும்போது ஆடை அணிகலன் பூணுவதை இவ்வரிகள் சுட்டுகின்றன. இத்தகைய வருணனைகள் தம்பிமார்க்கதையில் பல இடங்களில் அமைந்து கதை நீட்சியையும் சுவையையும் உருவாக்குவது காணத்தக்கது.

## உவமைகள் அமைப்பு

கதைப்பாடல்களில் கருத்து விளக்கத்திற்கும் சுவை யூட்டுவதற்கும் பெருந்துணை புரிவன உவமைகள் எனலாம். அணிநயங்களின் தலைமையணியாகத் திகழும் உவமைகள் பாமர மக்களின் வாயணிகளாக ஒளிவிடுவனவாகும். தம்பிமார் கதைப்பாடலில் பல்வேறு நிகழ்ச்சிகளின்போதும் உவமை பயன்படுத்தப்படுவது காணத்தக்கது. சில இடங்களில் தொடர் உவமைகளும் வந்து சுவையார்வம் மிகுவிப்பதைக் காணலாம்.

தம்பிமார் பொன்னாங் குருவிபோல் பாயும் போர் முறையைக் களரியில் படிக்கின்றனர். அழகப்ப முதலியார் முன் மதப்புலி போல் வலிய தம்பியும் சினப்புலிபோல் குஞ்சு தம்பியும் செல்கின்றனர். முதலியார் படைகளும் வர்மா படைகளும் மாரி சரம் பொழிந்தது போல் போராற்றுகின்றனர். முகங்காட்ட வந்த வலிய தம்பியிடம் வேங்கைப்புலி போல வர்மா சீறுகிறார். ஈரச் சீலையில் எள் அப்பினாப் போல் மன்னரின் படைகள் வலிய தம்பியை அமுக்கிப் பிடிக்கின்றன. பொன்னாங் குருவிபோல வலிய தம்பி மன்னரின் படைகள் மீது பாய்கிறார். கோழிப்போர் பொருதுவது போல் வலிய தம்பி எதிரிகளைக் குத்தினார்.

வலிய தம்பி தாக்கப்பட்டதையறிந்த குஞ்சுதம்பி, ஈன்ற புலிபோலப் பாய்ந்து வந்தார். கடுவாய்கள் எதிர்க்கும் புலி போலத் தம்பியைக் காவலர்கள் பாய்ந்து சிறை பிடிக்கின்றனர். ஆடு கோழியை அறுப்பது போல மார்த்தாண்ட வர்மா வலிய தம்பியின் குரல் வளையை அறுத்தார். கோவிக்கல் கொட்டாரம் ஆடறுத்த

களம் போல ஆகிறது. கட்டி விட்ட மெழுகு போல் தம்பிமாரின் தாயார் கண்ணீர் விட்டழுகிறாள். தட்டிவைத்த பொன்னது போல் களைந்தேனே என் மகனே என்று ஏங்குகிறாள். இவ்வாறு பல்வேறு நிகழ்வுகள் உவமைப் பயன்பாட்டால் சுவையும் விளக்கமும் பெறுவது காணலாம்.

தம்பிமாரின் தாய், தங்கை, மாமன் கலங்கியழுது அரற்றுவது தொடர் உவமைகளால் விரித்துரைக்கப்படும் பாங்கும் உள்ளது.

**கறையான் நுழைந்த மரம்போல**
**காற்றடித்த சாவி போல்**
**நான் பேடுழந்த மரமானேன்**
**பெரும்பாவி யானேனே**
**குறுக்க விளைந்த பிச்சிக்கொழுந்து**
**நுள்ளிப் போட்டாப் போல்**
**நான் தலை சரிந்த மரமானேன்**
**சாவியிட்ட பயிரானேன்.**[43]

அவலமும் சோகமும் தொடர் உவமைகளால் இங்கே அழுத்தம் பெறுகிறது. கேட்போர் சுவையார்வமும் மிகுவிக்கப் படுகிறது. இது போன்ற உவமை விளக்கங்கள் காட்சியாகி நெஞ்சிலும் நினைவிலும் இடம் பிடிக்கின்றன எனலாம்.

### முடிவுரை

வடிவ அமைப்பும் மொழியமைப்பும் கதைப்பாடலின் கட்டமைப்பு முழுமை பெறத் துணை செய்கின்றன. நூல் தொடக்கத்தில் அமையும் காப்பு வணக்கமும் வாழ்த்தும் எழுதியவரின் படிப்பவரின் சமயவுணர்வினோடு பாதிப்பு களின்றிப் பாடி முடிய அடைக்கலமும் பாதுகாப்பும் தேடும் மனப் பாங்கையும் காட்டுவனவாகும். நூற் பெயர் அமைப்பு கதைப் பாடலின் கருவை விளக்கும் குறிப்பையும் கதைத் தலைமை யையும் சுட்டி நிற்பது காணத்தக்கது.

மார்த்தாண்ட வர்மாவால் கொலை செய்யப்பட்ட தம்பிமார்களும், ஏங்கியழுது தற்கொலை செய்த தாய், தங்கை,

மாமன் ஆகியோர் கயிலாயம் சென்று மகாதேவர் அருள்பெற்று வழிபடுவதற்குரிய தெய்வங்களாக மாறிய நிலையை இறுதியில் குறிப்பிடப்பெறும் 'புதுக் கூட்டத்து வாதை' என்னும் பெயர் உணர்த்துவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

வாய்மொழியாகப் பலகாலம் பலராலும் பாடப்பெற்றும் எழுதப் பெற்றும் வரும் வில்லுப்பாட்டாதலின் ஆசிரியர் பெயர் அமையவில்லை எனத் துணியலாம். நூலின் இறுதியில் காலம் பற்றிய குறிப்புகள் அமைந்திருந்த வரி அழிந்து மாய்ந்து, 'புதன் கிழமையன்று முடிந்தது' என்ற குறிப்பு மட்டும் எஞ்சிய நிலை நூலின் பழமையையும் ஆழமான வாய்மொழிப் பயன்பாட்டினையும் உணர்த்துவதாகும்.

பா அமைப்பில் அடிகளும் சீர்களும் சிதைந்தும் மருவியும் அமையும் நிலை நூலின் பழமையையும் பயன்பாட்டினையும் சுட்டி அமைவதாகும். இறந்துபட்ட தம்பிமார் கூட்டத்தினர் கயிலாயத்தில் சென்று மகாதேவரை வணங்கி வாழ்த்தி வரம்பெற்ற நிலை இறுதி வாழ்த்துக்குப் பதிலியாக அமைந்ததாகலாம் என்பது கருத்து. பல்வேறிடங்களில் வந்து செல்லும் பயண ஊர்ப் பட்டியல் நீட்சிக்கு வழிவகுப்பதாகவும் கதையின் சரித்திர ஆதாரத்தைச் சுட்டுவதாகவும் அமைவது காணலாம். மலையாளச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், அடுக்குத் தொடர்கள், ஒலிக்குறிப்புச் சொற்கள் ஆகியவற்றின் பயன்பாடு தம்பிமார் கதைப்பாடலினை மலையாளப் பின்புலம் மிக்க ஒரு பாட்டாகக் காட்டுவதாகும். பல்வேறிடங்களில் இடம்பெறும் அந்தாதி அமைப்பு கதைத் தொடர்ச்சியின் இணைப்புத் தொடர்பு நோக்கிலும் கதை அழுத்தத்தினையும் சுட்டி அமைவதாகும்.

சொற்களும் தொடர்களும் திரும்ப வருதலும் அடுக்கி வருதலும் கதைக் கருத்து விளக்கம் கேட்போர் மனத்தில் பதியவும் ரசனை பெறவுமாக அமைந்தனவாகும். சில வரிகளின் தொடக்கத்தில் இடம்பெறும் உரைநிலைக் குறிப்புகள் கதையின் அடுத்தக் கட்ட இணைப்புத் தொடராக அமைவது காணலாம்.

கதை மாந்தரின் உரையாடல் அமைப்புகள் உணர்ச்சி பூர்வமான ஒரு நாடகக் காட்சியினைக் காட்டி நிற்பனவாகும்.

ஓசை ஒலிநய இயைபு அமைப்பு தம்பிமார் கதை வில்லுப் பாட்டாகப் பாடப்படும் போக்கினையும் கேட்போர் செவிக்கும் நெஞ்சுக்கும் இன்பம் பயக்கும் நோக்கினையும் உணர்த்தி யமைவதாகக் கண்டறியப்படுகின்றது.

பல்வேறு நிகழ்ச்சிகள் பற்றிய விளக்க வருணனைகள் கதை நீட்சிக்கு மட்டுமின்றிச் சுவை பயப்பதற்குமாம் என்பதும் எடுத்துக்காட்டப் பெறுகிறது. இக்கதைப் பாடலில் ஆங்காங்கே அமையும் பல உவமைகள் கருத்துத் தெளிவைப் புலப்படுத்தவும் பாமரர் வாய்மொழிப் பண்பாட்டினைச் சுட்டவுமாகி நிற்கின்றன எனலாம். மொழியமைப்புக் கூறுகள் பல, நாட்டுப்புறயியல் கூறுகளாகவும் அமைவது எடுத்துக்காட்டப்படுகிறது.

## குறிப்புகள்

1. பெருமாள். அ.நா., தமிழில் கதைப்பாடல், ப. 21
2. Arunachalam. M, Ballad Poetry, p. 57
3. த.மா.க.வ. 4
4. மேலது, வ. 5
5. மேலது, வ. 8
6. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 86
7. த.மா.க., வரி. 1-2
8. மேலது, வரி. 3-4
9. மேலது, வரி. 6-8
10. மேலது, வ. 1866
11. மேலது, வ. 1879
12. நடராசன். தி, சர்வேஸ்வரன். ப, (பதிப்பர்) த.மா.க. நூன்முகம், ப. 11
13. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 86
14. Arunachalam. M. Ballad Poetry, p. 22
15. த.மா.க.வ. 1818
16. மேலது, வரி. 1863-1865

17. மேலது, வரி. 918-922.
18. திரிவிக்கிரமன் தம்பி. ஜி, தெக்கன் பாட்டுகள் ஒரு படனம் (மலை), ப. 26
19. Arunachalam. M. Ballad Poetry, p. 24
20. லூர்து. தே, நாட்டார் வழக்காறுகள், ப. 12
21. த.மா.க, வ. 386
22. மேலது, வ. 360
23. மேலது, வரி. 845-846
24. லூர்து. தே, நாட்டார் வழக்காறுகள், ப. 102
25. த.மா.க, வரி. 1489 - 92
26. மேலது, வரி. 624 - 625
27. மேலது, வ. 626
28. மேலது, வ. 137
29. மேலது, வ. 1676
30. மேலது, வ. 1725
31. மேலது, வரி. 55 - 56
32. மேலது, வரி. 643 - 644
33. மேலது, வரி. 686 - 687
34. மேலது, வரி. 774 - 777
35. மேலது, வரி. 786 - 787
36. மீரான் பிள்ளை. எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 141
37. த.மா.க, வரி. 353 - 354
38. மேலது, வரி. 903 - 904
39. மேலது, வரி. 282 - 283
40. மேலது, வரி. 286 - 287
41. Arunachalam. M. Ballad Poetry, p. 21
42. த.மா.க, வரி. 1398 - 1403
43. மேலது, வரி. 1729 - 1733

# இயல் - நான்கு

# கதையும் கதை மாந்தரும்

## முன்னுரை

கதையும் கதை மாந்தரும் ஒரு கதைப் பாடலின் எலும்பும் சதையும் போன்றவர்கள். எலும்பு போன்ற கதைக்குரிய சதை போன்ற நிகழ்வுகளை உருவாக்குகிறவர்கள் கதை மாந்தர் எனலாம். கதைக் கருவிலிருந்து போராட்டங்களால் சிக்கலை உருவாக்கிப் பின்னலைப் பின்னிக் கதைத்திட்டத்தை நடத்திச் செல்பவர்களே நேர் எதிர் கதை மாந்தர். இவ்வாறு கதைத் திட்டத்தைச் சமைக்க உதவுவதால் இவர்கள் பாத்திரங்கள் எனப்பட்டனர். இவர்களது பண்பு நலன் அமைப்பு பாத்திரப் படைப்பு எனப் பெயர் பெற்றது.

## கதை

கதையடிப்படையில் தோன்றிய, கதைப் பாடல்களின் உயிர்நாடியாக அமைவது கதை. இந்தக் கதை ஒரு முக்கிய மத்தியக் கருவிலிருந்து உருவாகிறது. குறிப்பிட்ட ஒரு நிகழ்வுடன் தொடங்கி, பல்வேறு நிகழ்ச்சிகளால் உருவாகும் சிக்கல்களால் பின்னப்பட்டு வளர்ச்சியுற்றுத் திருப்பங்களுக்குட்பட்டு முடிவினைப் பெறுவது கதையின் இயல்பாகும். கதை நீட்சிக்கும், விளக்கத்திற்கும், சுவைக்கும் கிளைக்கதைகள் துணை செய்யும்.

### கூற்று முறை

கதைப்பாடல்கள் பாடப்படுவதற்குரியன. அவற்றிற்கென்று ஒரு கூற்று முறை உண்டு. ஆசிரியர் நேர் கூற்றாகவன்றி, பிறர் கதை சொல்லும் முறையில் அமைவதாகும் தம்பிமார் கதை. வில்லுப்பாட்டாகப் பாடப்படுவதற்குரியதாதலின் தம் முன் உட்கார்ந்திருப்போர்க்குப் பாடகர் எடுத்துரைக்கும் பாங்கிலேயே கதைக் கூற்றுமுறை அமைந்துள்ளது காணலாம்.

### கதைத்திட்டம்

ஒரு கதையின் கரு, தொடக்கம், பின்னல், வளர்ச்சி, திருப்பம், முடிவு, விளைவு போன்றவற்றை உள்ளடக்கியது கதைத்திட்டம்.[1] கதை நிகழ்ச்சிகள் சார்ந்த போராட்டங்களினால் பின்னலை உருவாக்கி நகர்த்திச் சென்று ஒரு முடிவினை ஏற்படுத்துவதே கதையின் செயலாகும். இதனைத் தம்பிமார் கதையிலும் காணலாம்.

### கதைக் கரு

கதையைக் கோழி முட்டைக்கு உவமித்துக் கூறலாம். முட்டையின் உள்ளே நடுவிலமையும் மஞ்சள் கரு போன்றது கதைக்கரு. அதனோடு சுற்றியிருக்கும் வெள்ளைக்கரு போன்றது கதைப்பின்னல். மஞ்சள் கருவிலிருந்து குஞ்சு உருவாவது போல் கதைக் கருவிலிருந்து கதைத்திட்டம் உருவாகிறது. பஞ்சில் விழும் சிறிய தீப்பொறி பெருந்தீயை உருவாக்குவது போன்று கதை நிகழ்ச்சிகளில் விழும் கதைக்கரு கதைத் திட்டத்தை உருவாக்குகிறது எனலாம். தம்பிமார் கதையின் அடிப்படைக் காரணியாக அமையும் கதைக்கரு, பெண் காரணமாக எழுந்ததாகும்.

திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மா பத்மநாபபுரம் கொட்டாரத்திலிருந்து மாமனார் ராமவர்மா வாழ்ந்திருந்த இரணியல் சிங்கநல்லூர் படைவீட்டிற்குச் செல்லும் பாதையில், வள்ளியாற்றில் அழகு மங்கையொருத்தி நீராடுவதைக் கண்ணுற்றார். அவளது அளவிலா அழகில் மயங்கிய மன்னர் அவள் யாரென்று வினவ, "தம்பிமாரின் உடன்பிறந்த

கொச்சுமணி மாடம்மை" என மந்திரிமார் பதிலளிக்க, உடனே தம்பிமாரை அழைத்துவரக் கட்டளையிட்டார் :

**வாரும் எந்தன் தம்பிமாரே!**
**வார்த்தை யொன்று சொல்லக் கேளும்**
**வரிசையுள்ள சிங்க நல்லூர் படை**
**வீட்டில் வந்துதித்த கொச்சு மணித்தங்கை**
**நிங்ஙளுட உடன் பிறந்த நேசமுள்ள**
**தங்கையாரை நேசமுடன் தரவே**
**பருவட்டங்கள் நான் கொடுக்க நிச்சயமாய்**
**தரவேணு மென்று கல்பித்தார்[2]**

மன்னரின் கட்டளையை மறுத்து விடுகின்றனர் தம்பிமார். ஆத்திரமடைந்த மன்னர், "என் கண்ணெதிரே நிற்க வேண்டாம்" என்று தம்பிமாரைத் துரத்திவிட்டார். இந்த முக்கிய நிகழ்வே தம்பிமார் கதையை நகர்த்தும் முக்கியக் கதைக் கருவாகவும் பாடுபொருளாகவும் அமைவதாகும்.[3] ஆதலின் மகட்கொடை மறுப்பே கதைக்கரு எனலாம்.

**கதைத் தொடக்கம்**

கதைப் பாடல்களின் கதைத் தொடக்கம், தொடக்கத் திலிருந்து முறையாகவும், இடையிலிருந்து திருப்பு முன் காட்சியாகவும் தொடங்குவதுண்டு.[4] தம்பிமார் கதை வரன் முறையுடன் தொடக்கத்திலிருந்தே தொடங்குவது காணலாம்.

**மாத்தானை துரத்தி வெட்டி**
**வையகத்தை அரசாண்டிருந்தார்**
**ராமவர்மா தம்புரான்**
**நாட்டை அரசாண்டிருந்தார்[5].**

என்பது முறையானக் கதைத் தொடக்கம் பற்றிய நூல் சான்று. மார்கழி மாதத்தில் சுசீந்திரம் கோயில் திருவிழா காண மன்னர் படை பரிவாரங்களுடன் உலா வருகிறார். கடுமையான வறட்சியும் பஞ்சமும் காரணமாக ஏற்பட்ட வறுமையால் அயோத்தி மகாதேவர் கோயிலிலிருந்து வந்த அடியார்களான

கிருட்டிணன் - அபிராமி என்னும் அண்ணன் தங்கையர் மன்னரைக் கண்டு வணங்கி நிற்கின்றனர். அபிராமியின் அபாரமான அழகு அரசரை வெகுவாகக் கவர, மணமுடிக்க விருப்பங் கொள்கிறார். நாகர்கோவிலில் வைத்து நன்மணம் நடந்தேறுகிறது. இரண்ய சிங்கநல்லூர் படைவீட்டில் இல்லறம் இனிதாகத் தொடங்குகிறது. இவ்வாறு இன்பியல் பின்புலத்தில் கதை இதமாகத் தொடங்கி நடைபோடுவது காணலாம்.

**கதைப் பின்னல்**

ஒரு கதை தங்கு தடையின்றி வளர்ச்சியடைய சிக்கல் ஏற்பட வேண்டும். சிக்கலின்றிக் கதைப்பின்னல் உருவாக வாய்ப்பில்லை[6]. தம்பிமார் கதையில் தம்பிமாருக்கும் மன்னர் மார்த்தாண்டவர்மாவுக்கும் இடையே உருவாகும் கருத்து மாறுபாடுகள் பூசலையும் போராட்டத்தையும் ஏற்படுத்துகிறது. இதனால் உருவாகும் சிக்கல்கள் பின்னல்களைப் பின்னிக் கதையை நகர்த்திச் செல்வதைக் காணலாம்.

வாலியான் பாறை சங்கமத்தில் நீராடி வந்த வர்மா அம்மை நோய் வாய்ப்பட்டு இறப்பெய்துகிறார். மருமக்கட்தாய முறைப்படி மருமகன் மார்த்தாண்டவர்மா ஆட்சியுரிமை பெறுகிறார். ஒரு தடவை பத்மநாபபுரம் கோட்டையிலிருந்து வர்மா, மறைந்த மாமனாரின் இரணியல் சிங்கநல்லூர் படைவீட்டிற்குச் செல்லும் வழியில் வள்ளியாற்றில் அழகு மங்கையொருத்தி நீராடி நிற்பதைக் கண்டு, மையல் கொள்கிறார்.

அப்பெண் தமது முறைப் பெண் கொச்சுமணி மாடம்மை என்பதை யறிந்ததும் அவரது ஆவல் பன்மடங்காகிறது. உடனே மைத்துனன்மாரான தம்பிமாரை வருவித்துப் பெண் கேட்கிறார். “துருவத்தில் பிறந்தார்க்கு இல்லத்தில் பெண் கொடுப்பதில்லை” என்று அவர்கள் மறுத்துவிட, ஆத்திரம் பொங்க அவர்களைத் துரத்தி விடுகிறார். இனிமையாகத் தொடங்கிய கதை பெண் மறுப்பில் கசக்கத் தொடங்குகிறது. இருகூட்டத்தாரிடையே அகமனப் போராட்டம் கொள்கிறது. இது வெளிப்படையான புறப் போராட்டங்களுக்கு விதை விதைக்கிறது.

தம்பிமாரின் உரிமைகளைப் பறித்து நாட்டை விட்டு விரட்ட மன்னர் திட்டமிடுகிறார். தமது மாமனாரின் பள்ளி மெத்தையை எடுத்துவர ஆள் அனுப்ப, எடுத்து வரும் வேளையில் சிறிய தம்பி அதைக் கத்தியால் கிழித்தெறிந்து விடுகிறார். இதனால் இருக் கூட்டத்தாரிடையே விரிசலும் பிணக்கமும் ஏற்பட கதைச் சிக்கல் உருவாகிறது.

அம்மாமன் கொடுத் திருந்த
அதிய தொரு வகை துகையும்
வகை துகையும் மானியங்களும்
வாய்ந்த தொரு முதலெடுப்பும்
இனி நாமளெடுத்தா லல்லவோ
இவ்விடமிட்டு விரட்டவேணும்[7]

என்பது மன்னரின் நெஞ்சில் எழுந்த திட்டம். அதன்படியே தம்பிமாரின் வஸ்த்து வகைகளையும் நிர்வாக உரிமைகளையும் பறிக்கிறார் மன்னர். மார்த்தாண்டவர்மாவின் வஞ்சகச் சூழ்ச்சியும் தம்பிமாரின் மனமறுதலிப்பும் பின்னலை மேலும் வலுப்படுத்துகிறது எனலாம்.

**கதை வளர்ச்சி**

பல்வேறு கதை மாந்தர்களின் செயல்பாடுகளினால், பின்னப்பட்ட கதை நகர்ந்து செல்ல முனையும். நகரும் பாதையில் புதிய திட்டங்கள் உருவாகிச் செயல்படத் தொடங்கும். இது கதை வளர்ச்சிக்குக் காரணமாகும். இது கதை நீட்சியையும் ஊக்கப்படுத்தும்.

தம்பிமார் மறுதுருவ குறுநில மன்னர் அழகப்ப முதலியாரைச் சந்தித்துப் படையுதவி பெறப் புறப்பட்டனர். தாயாரையும் தங்கையையும் சுசீந்திரம் இராமகிருட்டிணக் குருக்களிடம் ஒப்படைக்கின்றனர். நாட்டாரும்,

ஆனையும் ஆனையும் ராவிக் கொண்டால்
அதிலிருந்த கொசு தனக்கு
அங்கே சேதம் வந்தது போல்
அளிவு வந்து பிடித்திடுமோ?[8]

என அஞ்சி, தம்பிமாரைத் தடுக்க முனைந்தனர். "மன்னரை வென்று கோட்டையை விட்டுத் துரத்துவதே எம் வேலை" என்று மறுத்துவிட்டனர் தம்பிமார்.

நெல்லைக்குச் சென்று, முதலியாருக்குப் பெரும் பொருள் அளித்து, அரசுரிமை இழந்து தவிக்கும் தங்களுக்குதவ வேண்டினர். தென்குமரியில் மூன்று நாள் கொள்ளையிடவும் உரிமை அளிப்பதாகக் கூறினர். பேராசை பிடித்த முதலியார் உடனே பெரும் படைகளுடன் நாஞ்சிலுக்குப் புறப்பட்டார். வழி நெடுக ஊர்களையும் கோயில்களையும் கொள்ளையிட்டார்.

செய்தியறிந்த மன்னர் மார்த்தாண்ட வர்மா மந்திரிமார் கொச்சுரவி, கிருட்டிணன் கேசவன் ஆகியோர் தலைமையில், பிள்ளைமார் படைகளையும் மாடம்பிமார் படைகளையும் திரட்டிப் போருக்கு ஆயத்தமானார்.

இரு படைகளும் பத்மநாபபுரம் அருகிலுள்ள திரு விதாங்கோட்டில் மோதின. பீரங்கிக் குண்டடிபட்டுப் பலர் இறந்துபடுகின்றனர். திடீரென்று மாடம்பிமாரின் நாயர்படை பின்வாங்க, திக்குமுக்காடிப் போன வர்மா புறமுதுகுகாட்டி ஓடி பத்மநாபபுரம் கொட்டாரத்தில் நுழைகிறார். எதிர்ப்படைகள் கொட்டாரத்தைச் சுற்றி வளைத்து முற்றுகையிட அங்கிருந்து மயிலாடும் பொத்தை சுரங்கம் வழி குதிரையில் தப்பி ஓடுகிறார். தம்பிமார், முதலியார், வர்மா, பிள்ளைமார், மாடம்பிமார் பங்குபெறும் தொடர் நிகழ்ச்சிகளால் கதை வளர்ச்சி உச்சக் கட்டத்தை அடைவது காணலாம்.

**கதைத் திருப்பம்**

ஒரே ஒழுங்கில் போய்க்கொண்டிருக்கும் கதையின் இடையே திடீரென்று ஏற்படும் மாற்றத்தையே கதைத் திருப்பம் என்பர். இந்தத் திருப்பம் கேட்போரை எதிர்பார்ப்பு நிலையில் வைத்து ஆர்வத்தைத் தூண்டச் செய்வதாக அமையும்.[9] இத்தகைய ஒரு திடீர் திருப்பம் தரும் நிகழ்ச்சி தம்பிமார் கதை யிலும் நிகழ்கிறது. இத்திருப்பம் கதைக் கேட்டிருப்போரையும் படிப்போரையும் வியப்பிலாழ்த்துவதைக் காணலாம். மறுதலித்து

முரண்பட்டு நின்ற தம்பிமார், வர்மா கூட்டத்தினர் சந்தி செய்வதும் சமாதானம் கொள்வதும் தம்பிமார் கதையில் இடம் பெறும் திருப்பமாகும். இத்தகைய ஒரு திருப்பத்திற்குத் தூண்டுதலாகவும் காரணியாகவும் அமைபவர் நெல்லை மன்னர் அழகப்ப முதலியார் என்பது குறிப்பிடத்தக்கது.

தப்பிச் செல்லும் வர்மாவைப் பின் தொடர்ந்து சென்ற குஞ்சு தம்பி, சாரைக்கோடு எனுமிடத்தில் வைத்து மன்னரை வாளால் ஓங்கி வெட்ட முயல முதலியார் தடுத்து விடுகிறார்.

**அரசழித்தல் ஞாயமில்லை**
**ஆணழகா குஞ்சு தம்பி**
**மன்னவரைக் குலை செய்தல்**
**வையகத்தில் கேட்டதில்லை**
**சற்றே நேரம் பொறுத்தருளும்**
**தடந்தோளா குஞ்சு தம்பி**[10].

இதற்கிடையே மன்னர் கண்ணசைக்க பெரும் பொருளும் பொன்னும் முதலியாருக்கு அளிக்கப்படுகிறது. முதலியார் மனமகிழ்ந்து மன்னருக்கு ஆதரவாக இரு கூட்டத்தாரையும் நீலகண்ட சாமி கோயிலில் வைத்து சத்தியம் செய்ய வைக்கிறார்.

மார்த்தாண்டவர்மா இரகசியமாக ஒரு ஈயை விரலிடுக்கில் மறைத்து வைத்து "ஈ உயிர் உள்ள மட்டும் இரண்டகம் செய்ய மாட்டேன்" என்று கூறியபடி சத்தியம் செய்த மறுகணமே ஈயை நசுக்கிக் கொன்றுவிடுகிறார். கள்ளம் கபடம் அறியாத தம்பிமார் உண்மையாகவே சத்தியம் செய்தனர்.

தம்பிமாரின் சொத்து வகை, நிர்வாக உரிமை திருப்பியளிக்கப்படுகிறது. கையூட்டாகக் கிடைத்த பெரும் பொருள் பொன் குவியல்களுடன் முதலியார் நெல்லை திரும்புகிறார்.

எதிரிகளாக இருந்தவர்கள் நண்பர்களாக மாறுவதாகக் காட்டும் இந்தத் திருப்பத்திலும் வர்மாவின் மனத்தில் வஞ்சகமும் சூழ்ச்சியும் வலை பின்னுவதை நிகழ்வுகள் சுட்டி நிற்பது காணலாம்.

**கதை முடிவு**

கதை வளர்ச்சியின் உச்சத்தில் ஏற்படும் திருப்பம் கதை முடிவிற்கு இழுத்துச் செல்வது மரபு. மன்னரின் அகமனத்தில் கருவாகி உருவாகும் சூழ்ச்சி சில திட்டங்களைச் செயல்படுத்த, கதை இறுவாய்க்கு இழுத்துச் செல்லப்படுவது காணலாம்.

சின்னாட்கள் செல்ல மன்னர் மனச்சூழ்ச்சியுடன், தம்பிமார் தன்னை வந்து முகம் காண்பிக்குமாறு கட்டளையிட்டார். சூதுவாது அறியாத தம்பிமார் ஆடையணிகலன்கள் அணிந்து மன மகிழ்ச்சியுடன் தாயாரை வணங்கி நாகர்கோவில் கொட்டாரம் நோக்கிப் புறப்பட்டனர். வழியில் வைத்து அவசர நிர்வாகப் பணி காரணமாகக் குஞ்சுதம்பி தாழக்குடி போய் வருவதாகக் கூறிப் புறப்பட்டார். வலிய தம்பியைப் பொய் முகத்துடன் வரவேற்ற வர்மா அன்பாகப் பேசி உடைவாளை கையகப்படுத்தினார். சுசீந்திரம் கோயிலிருந்து கொள்ளை யடிக்கப்பட்ட பொருட்கள் காரணமாக இருவருக்குமிடையே ஏற்பட்ட வாக்குவாதம் சண்டையில் முடிகிறது. வலிய தம்பி மற்போர் ஆற்றத் தொடங்க படைவீரர்கள் பலர் வந்து வரிந்து கட்டிச் சிறைப்பிடித்து மன்னர் முன் கொண்டு வர அவர் திட்டமிட்டபடி குரல்வளையைக் கத்தியால் அறுத்துக் கோரமாகக் கொலை செய்கிறார்.

செய்தியறிந்த குஞ்சு தம்பி ஓங்கிய வாளுடன் தாழக்குடியிலிருந்து பாய்ந்து வந்தார். கொட்டார வாசலில் வாள் தட்டிக் கைப்பிடி உடைய கீழே விழுந்தது. நிராயுதபாணியான குஞ்சு தம்பி பதறாது மற்போர் ஆற்றத் தொடங்க, படை வீரர்கள் பலர் பாய்ந்து வரிந்து கட்டிச் சிறைப்பிடித்து மன்னர் முன் கொண்டு செல்ல, திட்டமிட்டபடி குஞ்சு தம்பியின் குரல்வளையும் கத்தியால் அறுக்கப்படுகிறது. செய்தியறிந்து வந்த தாயாரும், தங்கையும், மாமனும் மனம் கலங்கியழுது அரற்றித் தற்கொலை செய்து கொண்டனர்.

இன்பியலாகத் தொடங்கிய கதை சில துன்பியல் கூறுகளைக் கடந்து வளர்ச்சியின் சிகரத்தில் மீண்டும் இன்பியல் திருப்பத்தை அடைந்தது. ஆனால் முடிவுக்குச் செல்லும்

தறுவாயில் மீண்டும் வஞ்சகச் சூழ்ச்சியின் ஆட்சிக்குட்பட்டுத் துன்பியலைத் தழுவிக் கொள்கின்றது என்பதே உண்மை.

**கதை விளைவு**

துன்பியல் கதைப் பாடல்களின் இறுதியில் போராடி இறந்துபடும் வீரர்கள் உயர்ந்தவர்களாகவன்றி இறந்தவர்களாகக் கருதப்படுபவரல்லர்[11].

அவர்கள் புகழ்பெறவே கயிலாயம் போனவராகக் கூறப்படுபவர். கதை முடிவில் இத்தகைய விளைவுகளைத் தம்பிமார் கதையிலும் காணலாம்.

**நாடுநகர் தானரிய நல்ல**
**தம்பிமார் யிறந்து விட்டார்**
**பட்டுவிட்டார் யிருபேரும்**
**பரமசிவன் கயிலயிலே**
**வரம் வாங்க வேணுமென்று**
**மகாதேவரிடத்தில் சொல்லுவரோ**[12]

கதைப்பாடல் கூறும் இக்கருத்து சோக முடிவு கொண்டவர்களுக்கு விளைந்த விளைவினை விவரிப்பதாகும். மேலுலகில் சென்றாலும் இவர்கள் கீழுலகில் வழிபடப்படுவதற்கு உரியவராவர். அந்நிலையையும் கதைப் பாடல் இயம்புகின்றது.

**கூடியவர் பூசை பண்ண**
**கோடி கோடி வரங்கள் பெற்று**
**வரங்கள் பெற்று வையகத்தில்**
**பூசையுண்டு வீற்றிருந்தார்**[13]

போரில் வீரமரணமடையும் கதை மாந்தர்களும் பிறரும் வட்டாரத் தெய்வங்களாக வணங்கப்படுவது மரபு[14].

இக் கருத்திற்கேற்ப, தம்பிமார் அவர்கள் வாழ்ந்த இடங்களில் புதுக்கூட்டத்து வாதையாக வழிப்படப்படுகின்றனர். தாயாரும், தங்கையரும் இசக்கியாகவும், நீலியாகவும் கோயில் பெற்றனர்[15]. இவை கதை முடிவின் விளைவாக அமைவன வாகும்.

**கிளைக்கதை**

கதைப் பாடல்களில் நீட்சிக்காகவும் விளக்கத்திற்காகவும் சுவைக்காகவும் முதல் கதையோடு இணைய சில துணைக் கதைகளை இடம்பெறச் செய்வதுண்டு. இக்கதைகள் முக்கியக் கதையின் கிளை போன்றமைவதால் கிளைக் கதைகள் என்பார். தம்பிமார் கதைப் பாடலில் ஒரே ஒரு கிளைக் கதை இடம் பெற்றமைவது காணலாம்.

வாலியான் பாறை தீர்த்தத்தில் புண்ணிய நீராட்டு நடத்தத் திருவிதாங்கூர் மன்னர் ராமவர்மா, படைப்பரிவாரங்களுடன் பயணம் செய்தார். அப்பகுதியிலுள்ள பல ஆறுகள் கடலில் சங்கமமாகும் புண்ணிய தீர்த்தம் என மந்திரிமார்கள் கூற மன்னர் ஆசைதீர நீராடினார். மன்னர் நீராடி முடித்துக் கரைக்குத் திரும்ப, திடீரென வந்த கடலலைகள் மன்னரின் காலடிகளைப் பின்தொடரத் தொடங்கின. இது கண்டு வியந்து, "கலியுகம் தானோ?" என்று கலங்கியவர், எல்லோரும் காண, சுட்டுவிரலை தறித்துப் பீறிட்ட குருதியை நீரில் பாயவைக்க, கடலலைகள் பின்வாங்கிச் சென்றன. இதனால் இவ்வூர் கை கடிகைப் பட்டணம் என அழைக்கப்படலாயிற்று. நாளடைவில் பெயர் மருவி கடியப் பட்டணம் ஆயிற்று[16]. இக்கிளைக் கதை மன்னரின் தெய்வப் பற்றையும் தெய்வீகச் சக்தியையும் விளக்குவதாகும். கதைக் கேட்போரின் சுவைக்காகவும் இது அமைந்தது எனலாம்.

**கதை மாந்தர்**

கதைப் பாடல்களின் காலத்தில் இடம் பெறும் செயல் வீரர்கள் கதை மாந்தராவர். இவர்களின்றிக் கதை நகராது. பல்வேறு நிகழ்வுகளினால் கதையை இயங்கவைப்பவர்கள் இவர்கள் எனலாம். கதைச் சிக்கல், கதைப் போராட்டம், கதைப்பின்னல் ஆகியவற்றுக்குக் காரணமும் காரியமுமாக அமையும் கதை மாந்தரை, கதையைச் சமைப்பவராதலின் பாத்திரங்கள் என்றும் கூறுவர். இவர்களது நடை, உடை, பழக்க வழக்கம், உரையாடல், சிந்தனைகளை உள்ளடக்கியதே பாத்திரப் படைப்பு ஆகும்.

தம்பிமார் கதையில் நேர் மாந்தர், எதிர் மாந்தர் எனும் இருவகையினர் அமைவர். இவர்களின் உட்பிரிவினராகத் தலைமை, துணை, குழு மாந்தர் இடம் பெறுகின்றனர். வீரப் போர்க்கதைப் பாடலாதலின் இடம் பெறும் மாந்தர் பெரும்பாலும் வீரப்பண்பு மிகவே காட்டப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இவர்கள் அரசர், அமைச்சர், தளபதி, வீரர் ஆகியவர்களாக அமைவது காணலாம்.

## நேர்மாந்தர்

நீதிக்கும் உண்மைக்குமாகப் போராடுகின்றவர்கள் நேர்மாந்தராவர். நேர்மையுடன் நடப்பவர்கள், எதிர்மாந்தர்க்குச் செயல்பாடுகளில் நேர்மாறானவர்கள் என்ற பொருளிலும் இப்பெயர் அமைந்தது எனலாம். நேர்மாந்தரை நேர்த் தலைமை மாந்தர், நேர்த்துணை மாந்தர், நேர்க்குழு மாந்தர் என வகைப்படுத்தலாம்.

## நேர்த் தலைமை மாந்தர்

எதிர் மாந்தரோடு மறுதலித்து அவர்களின் சூழ்ச்சிக்கு எதிராக நேர்மையாகப் போராடுகின்றவர்களின் தலைவரே நேர்த்தலைமை மாந்தராவர். தம்பிமார் கதையில் நேர்மாந்தராகத் தம் செயல்பாடுகள் வழி இனங் காணப்படுவர் தம்பிமாரான வலிய தம்பியும் குஞ்சு தம்பியும் ஆவார். எதிர்த் தலைமை மாந்தரான மன்னர் மார்த்தாண்ட வர்மாவின் அநீதிக்கெதிராகக் குரல் கொடுப்பதாலும் செயல்படுவதாலும் தலைமை மாந்தராக அமைவது காணலாம்.

## தம்பிமார்

தம்பிமார் எனும் பெயரினைப் போல பாத்திரப் படைப்பிலும் இணைந்தே காணப்படுகின்றவர்கள் இந்தச் சகோதரர்கள். உடன் பிறப்புகளான இவர்கள் செயல்பாடுகளும் கூட்டுச் செயல்பாடுகளாகவே அமைவது காணலாம். திடமும் வலுவும் பாசமும் தந்திரமும் உடைய வீரமாந்தர்களாக அமையும் இவர்களின் பொதுப் பண்பு நலன் அமைப்பை அடையாளங் காண இக்கூட்டுச் செயல்பாடுகள் உதவுகின்றன.

தம்பிமார் இளமையில் அண்ணாவி, ஆயான்மாரிடம் இணைந்தே மொழி, இலக்கியம், சிலம்பம், களரி, மற்போர், குதிரையேற்றம், ஆனையேற்றம் கல்விகளைப் பெறுகின்றனர். மன்னரிடம் தங்கை மணம் பற்றி மறுத்துரைக்கும்போது கருத்து வேறுபாடு காட்டாமலேயே செயல்படுகின்றனர்.

**மறுதுருவந் தனிலே சென்று**
**மாறிப்படை கொண்டு வந்து**
**மன்னவரைப் படைபொருது வெற்றி கொண்டு**
**பறித்த வகை எடுக்கவேண்டும்**[20]

என்று இருவரும் உறுதிபூண்டு செயல்படுகின்றனர். “மார்த்தாண்டரை மலைமேல் விரட்டி கோட்டையைப் பிடிப்போம்; கலங்க வேண்டாம்” என்பது தாயாரிடம் தம்பிமார் அளிக்கும் ஆறுதல் மொழி. அழகப்ப முதலியாரைச் சந்திக்கச் செல்லும்போது பரிசுப் பொருட்களை எடுத்துச் செல்வதும், “மன்னர்களே வருக” என அவர் வரவேற்க, “தாங்கள் இப்போது மன்னரல்ல” என்று பிறர் இரங்கும்படிப் பேசுவதும் இவர்களது பொருள் நுட்பப் பண்பு நலனைக் காட்டுவதாகும்.

முதலியார் படைகளுடன் இணைந்து வர்மாவுக்கு எதிராகப் போராடும் இடத்தில் இந்த அண்ணன் தம்பிமாரின் ஆற்றல் வெளிப்பட்டமைகிறது.

**காலோடு கை களறவே**
**கண்ணோடு மூக்கும் அற**
**மூக்கும் முகமும் சென்னியும்**
**அறவே முதுகினில் வெட்டுப்பட**
**வெட்டவே தட்டமீதில் யெழும்பி**
**விரவுடன் சாடுவாராம்**
**சாடவே முதுகில் அணியது**
**முடுகி தானவர் வெட்டுவாராம்**[21].

என்பது தம்பிமார் வீரம் பற்றிய போர்க்களக் காட்சிகளாக அமைவனவாகும். எனினும் முதலியார் படைகளுக்கு நாஞ்சில் நாட்டுக் கோயிலைக் கொள்ளையிட அனுமதி யளிப்பதும்

படையுதவிக்காக முதலியாருக்கு கையூட்டளிப்பதும் பண்பு நலன் குறைபாடுகளாகவே அமைகிறது எனலாம்.

தமிழக வரலாற்றுப் பாடல்களின் பெரும்பான்மையான கதைத் தலைவர்கள் போரில் கோரமாகக் கொலை செய்யப் படுவது அமைகிறது[22] என்பார் தம் கூற்றினை மெய்ப்பிக்கும் வண்ணம் தம்பிமார் வாழ்வு அமைகிறது. திருவிதாங்கூர் பகுதிகளிலுள்ள வில்லுப்பாட்டுகளில் வட்டாரத்தில் வாழ்ந்த வீரர்கள் போற்றியுரைக்கப்படுவர். கதை கேட்போருக்குத் துயரமும் பரிவும் ஏற்படுமாறு கதைச் சித்திரிக்கப்படும். இந்த நிலையே தம்பிமார் கதைப்பாடலிலும் அமைகிறது.

**வலிய தம்பி**

திருவிதாங்கூர் மன்னர் ராமவர்மா - அயோத்தி அபிராமி எனும் கிருட்டிணத்தாளம்மை தம்புராட்டியின் மூத்த மகன். கொச்சு மாடம்மை எனும் கொச்சு மணித்தங்கையின் அண்ணன். குஞ்சு தம்பிக்கு மூத்தவன் ஆதலின் வலிய தம்பி ஆயினன். உத்தர நட்சத்திரத்தில் பிறக்கும்போதே வலது கையில் சங்கும் சக்கரமும், அடையாளம் பெற்றவர், வீரமும் விவேகமும் தன்மானமும் உடையவர், தாயிடமும், தங்கையிடமும், தம்பியிடமும், மாமனிடமும் பற்றுடையவர்.

தந்தையார் இவருக்கு நாலாள் மூடு, பேட்டை, தாழக்குடி வருவாய், கூட்டப்புளி சிவனாண்டி நாடான் முதலெடுப்பு, வாத்தியார் கோணம் வஸ்த்து, இளநீர்ப் பறம்பு ஆகியவற்றை உரிமையாக்குகிறார். இளவரசர் என்ற முறையில் பல்லக்கிலும் படைவீரராகக் குதிரையிலும் பயணஞ் செய்வதாகக் காட்டப்படுகிறார்.

தங்கை கொச்சு மணிமாடம்மையால் அழிவு வரும் எனும் சோதிடனின் கணிப்புப்படி மன்னன் மார்த்தாண்டவர்மாவின் வஞ்சகச் சூழ்ச்சிக்குப் பரிதாபகரமாகப் பலியாவதாகக் காட்டப்படுகிறார். மதப்புலி, மதயானை ஆகிய அடை மொழிகளுக்கேற்ப இவரது வீரச் செயல்பாடுகள் அமைகின்றன. திட்டமிட்டபடி, முகம் காண வர அழைத்து, வாளைக்

கையகப்படுத்தி, வாக்கு வாதத்தை உருவாக்கி, இவரைக் காவலரால் வரிந்து கட்டிச் சிறைப் பிடித்துக் கோழைத்தனமாகக் குரல்வளையை அறுத்துக் கொலை செய்கிறார் வர்மா[17]. இளவரசராக அறிமுகமாகி, வீரராகச் செயல்பட்டு இறுதியில் மன்னரின் சூழ்ச்சிக்குப் பலியாகும் அப்பாவி தியாக வீரராக அமைகிறார் இவர்.

**குஞ்சு தம்பி**

ராமவர்மாவின் இளைய மகன், வலிய தம்பியின் இளைய தம்பி, எல்லா செயல்பாடுகளிலும் அண்ணனுடன் இணைந்து செயலாற்றியவர். ஆணழகன், வேங்கைப்புலி, சினப்புலி, ஈத்தப்புலி எனச் சிறப்பிக்கப்படுபவர். இளவரசராகப் பல்லக்கிலும் படைவீரராகக் குதிரையிலும் பயணம் செய்பவர். தாயாரிடம் மதிப்பும் மரியாதையும் கொண்டவர். தங்கையோடு பாசங் கொண்டவர். அம்மாண்டி விளை முத்திருளன் நாடான், கறுப்ப நாடான், கொடுப்பக்குளி குலசேகர நாடான் முதலெடுப்புகள், குதிரைகெட்டுக் கோணம், வம்பு மலைக் கோணம் வஸ்த்து வகைகள், இளநீர்ப் பறம்பு ஆகிய சொத்து, உரிமை வகைகள் மன்னரால் இவருக்கு அளிக்கப்படுகின்றன. ராமவர்மாவின் பள்ளி மெத்தையைப் பலவந்தமாக வர்மாவின் ஏவலாட்கள் எடுத்துச் செல்ல முயல, ஆத்திரத்தில் அதைக் கிழித்தெறிகிறார் இவர். மார்த்தாண்ட வர்மாவுக்கு எதிராகப் பலத்த போரில் ஈடுபடுகிறார்.

**குஞ்சு தம்பி கண்டல்லவோ**
**குதிரை விட்டு தான் மறித்து**
**குதிரை விட்டு தான் துரத்தி**
**கூண்ட தொரு தம்புரானை**
**சாரைக் கோட்டு ஏலயிலே**
**தம்புரானை வளைந்து கொண்டு**
**குப்பமிட்டு வளைந்து கொண்டு**
**குஞ்சு தம்பி மன்னவரும்**
**குதிரையின் மீதிருந்து**
**மந்திர வாளுறை கழற்றி**

**வடிவழகன் குஞ்சு தம்பி**
**கையலைந்து வெட்டும் நேரம்**
**கண்டாரே முதலியாரும்**[18]

புறமுதுகு காட்டி ஒடிய மன்னரைத் தொடர்ந்து சென்று வெட்ட முயலும் குஞ்சு தம்பியைச் சித்திரிக்கும் பாடல் வரிகள் இவை. வர்மாவின் கழுத்தில் வெட்டு விழுந்திருந்தால், தம்பிமார் கதை வேறொரு முடிவைப் பெற்றிருக்கும்.

வலிய தம்பியை மன்னரின் படைகள் சிறைப் பிடித்துக் கொன்றனர் எனும் செய்தியை அறிந்ததும் தாழக்குடியிலிருந்து ஓங்கிய வாளுடன் ஒடி வருகின்ற குஞ்சு தம்பியின் வாளின் கைப்பிடி கொட்டார வாசலில் கழன்றுவிட, காவலர்கள் வரிந்து கட்டி மன்னர் முன் கொண்டுவர, குரல்வளையை அறுத்துக் கொலை செய்யப்படுகின்ற அவலப் பாத்திரமாக அமைகிறார் குஞ்சு தம்பி.

## நேர்த்துணை மாந்தர்

நேர்த்தலைமை மாந்தரின் செயல்பாடுகளுக்குத் துணை நிற்பவர்களைத் நேர்த்துணைமாந்தர் எனலாம். இவர்களில் சிலர் பல செயல்பாடுகளில் பங்குபெற, சிலர் சில செயல்பாடுகளில் மட்டும் இடம் பெற்றமைவர். இவர்களை நேர்ப் பெருந்துணை மாந்தர் என்றும் நேர்ச் சிறுதுணை மாந்தர் என்றும் வகைப்படுத்தலாம்.

## நேர்ப் பெருந்துணை மாந்தர்

கதைத் திட்டத்தில் பல செயல்பாடுகளுக்குக் காரணமாகிக் கதையை நகர்த்திச் செல்பவர்களை நேர்ப் பெருந்துணை மாந்தர் எனக் கூறலாம். மன்னர் ராமவர்மா, நெல்லை குறுநில மன்னர் அழகப்ப முதலியார், ராமவர்மாவின் மனைவி அபிராமி என்ற கிருட்டிணத்தாளம்மை தம்புராட்டி, ராமவர்மாவின் மகளும் தம்பியரின் தங்கையுமான கொச்சுமணி மாடம்மை, தம்பியரின் மாமா கொச்சு மாறப்பப் பிள்ளை, சுசீந்திரம் ராம கிருட்டிணக் குருக்கள் ஆகியோர் இவ்வகையில் அடங்குவர்

### ராமவர்மா

திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தின் மன்னர் தம்பிமாரின், தங்கை கொச்சுமணி மாடம்மையின் தந்தை மார்த்தாண்ட வர்மாவின் மாமனார் திருவிழாக்களிலும் புண்ணிய தீர்த்தங்களிலும் பங்கு பெறுபவராகக் காட்டப்படுபவர் ஆதலின் சமயவுணர்வு மிக்கவர் எனலாம். சுசீந்திரம் திருவிழா காலத்தில் தம்மிடம் ஆசிர்வாதம் பெற வந்த, அயோத்தி மகாதேவர் கோயில் அடியாள், அழகி அபிராமியைத் திருமணம் செய்வதிலிருந்து அழகுணர்வும், இன்பவுணர்வும் உடையவராகக் கருதலாம். தமது மக்களின் பிறப்பின்போது உடன் ஜாதகப் பலன் கணிக்க ஏற்பாடு செய்வதிலிருந்து இவர் பழமை மரபில் ஊறியவர் என உணரலாம். மகளின் 16ஆவது வயதில் ஆண்மக்களுக்கு ஆபத்து வரும் என்பதையறிந்தும் கலங்காத மனமுடையவராக அமைகிறார்.

வாலியான் பாறை தீர்த்தக் காலத்தில் விரலறுத்த குருதியால் கடலைப் பின்வாங்கச் செய்வது இவரது தெய்வீக ஆற்றலை வெளிப்படுத்துவதாகும். "மாற்றானை துரத்திவெட்டி வையகத்தை அரசாண்டிருந்தார்"[23] எனும் குறிப்பு இவரது அரசியல் திறத்தினைச் சித்திரிப்பதாகும். மக்களுக்குப் பல வஸ்த்து வகைகளும் நிர்வாக உரிமைகளையும் வழங்குவது இவரது பாசப் பண்பினைச் சுட்டியமைவதாகும். மரணத் தருவாயிலும் மருமகன் மார்த்தாண்டவர்மாவிடம் தம் மக்களை ஒப்படைத்து 'பிழைபொறுக்க' என்பது இவரது பாசத்தையும் பொறுப்பையும் காட்டுவதாகும். மொத்தத்தில் பாசம், அன்பு, பொறுப்பு, நாட்டுப்பற்று, சமய உணர்வு உடைய பாத்திரமாக இவர் காட்டப்படுவது அறியலாம்.

### அழகப்ப முதலியார்

தம்பிமாருக்கு உதவும் மறு துருவத்து, நெல்லைக் குறுநில மன்னராகக் காட்டப்படுபவர் இவர். பொன்னும் பொருளும் குமரிக் கொள்ளை ஆசையும் காரணியாகத் தம்பிமாருக்கு உதவ முன் வருகிறார். நாஞ்சில் விளைகளை சூறையாடுவதும் சுசீந்திரம் கோயிலைக் கொள்ளையிடுவதும் இவரது நோக்கை வெளிப்படுத்துவதாகும். குஞ்சு தம்பியிடம் "மன்னரைக்

கொல்லல் முறையன்று" என்று கூறி மார்த்தாண்டவர்மாவைக் காப்பாற்றுவது இவரது மனித நேயத்தை வெளிப் படுத்துவதாகும். வர்மாவிடமிருந்தும் இவர் இதற்காகப் பொன்னும் பொருளும் கையூட்டு பெறுவதும் காட்டப்பட்டுள்ளது.

இரு கூட்டத்தாரையும் சந்து செய்வித்து சத்தியம் செய்ய வைத்தல் இவரது சமாதான நாட்டத்தைச் சுட்டியமைவதாகும். தம்பிமாரிடமிருந்து மன்னர் வர்மா பறிமுதல் செய்த சொத்துக் களையும் நிர்வாக உரிமைகளையும் மீட்டுக் கொடுத்தது இவரது நீதியுள்ளத்தை அடையாளம் காட்டுவதாகும். இவ்வாறு அழகப்ப முதலியார் பேராசை, வீரம், அரசியல் அறம், தந்திரம் ஆகிய குணநலன்களையுடைய பெருந்துணை மாந்தராக அமைவது காணலாம்.

### அபிராமி

பஞ்சமும் வறுமையும் காரணமாக வடநாட்டு அயோத்தியிலிருந்து வேலை தேடி வந்த கோயில் அடியாள் இவள். அழகால் திருவிதாங்கூர் மன்னரைக் கவர்ந்து 'தம்புராட்டி' ஆனவர். தம்பிமார், கொச்சுமணி மாடம்மையின் தாயார், கிருட்டிணத்தாளம்மை தம்புராட்டி எனப் பெயர் பெற்ற இவர், தம் மக்களிடம் மிகுந்த பாசம் கொண்டவர். மன்னர் மார்த்தாண்டவர்மாவோடு ஒத்துப்போக மக்களுக்கு அறிவுரைப்பது காணலாம். தம்பிமார்கள் மன்னரால் சதித்துக் கொல்லப்பட்டதையறிந்து நாகர்கோவில் கொட்டாரத்திற்கு விரைந்து சென்ற இவர்,

**என் மக்களை குலை செய்ய**
**இரங்காமல் போச்சோ மன்னா?**
**அறியாமல் செய்த பிழை**
**அரச மன்னர் பொறுப்பதில்லையோ?**
**பாவி மக்கள் செய்த பிழை தன்னை**
**பாராளும் மன்னர் பொறுத்தில்லையே?**[24]

என்று கேள்வி தொடுத்து மன்னரிடம் நியாயம் கேட்பது அமைகின்றது. ஏங்கி அழுது அரற்றி மக்களை இழந்த துயரத்தில்

தற்கொலை செய்வது நெஞ்சை நெக்குருகச் செய்வதாகும். இவ்வாறு மக்கள் மீது பாசமும் பொறுப்பும் உடைய தாயாகக் காட்டப்படுவது காணலாம்.

**கொச்சுமணி மாடம்மை**

ராமவர்மா - அபிராமி தம்பதியரின் அழகு மகள், தம்பியரின் பாசத்திற்குரிய தங்கை. தம்பிமார் கதையின் அடிப்படைக் கதைக் கருவுக்குக் காரணமானவள். இரணியலுக்கு அருகிலுள்ள வள்ளியாற்றில் கொச்சு மணித்தங்கை தோழியருடன் நீராடுவதை அதுவழி வந்த மன்னர் கண்ணுற, அவளது அழகில் மயங்கிவிடுகிறார்.

அவள் யார் என வினவ, தம்பியரின் தங்கை, ராம வர்மாவின் அழகுத் திருமகள் என அமைச்சர் பதிலிறுக்க, தமது முறைப்பெண் என்பதையறிந்து உடனே மணத்தூது அனுப்ப, தம்பிமார் மறுத்துவிடுகின்றனர். இதனால் ஆத்திரமடைந்த வர்மா தம்பிமார் கூட்டத்தின் சொத்து வகைகளையும் உரிமைகளையும் பறித்ததோடு நிற்காமல், "கண் முன்னால் நிற்காதீர்கள்" என அதட்டி விரட்டுகிறார். இறுதியில் நயமாக முகம் காண்பித்தல் பேரில் அழைத்து தம்பிமாரைப் படுகொலை செய்தார். செய்தியறிந்த கொச்சுமணி மாடம்மை அதிர்ச்சியும் ஏக்கமும் கொள்கிறாள்.

**ஏந்திழையாளும் நாக்கைப் பிடுங்கி**
**கையிலே வாங்கி**
**எறிந்தவள் பட்ட படுகளம் தன்னில்**
**ஏங்கியே சீவனும் வாயில் போக**
**நாடித் திருமுன்பி லெறிந்தாளே**
**வாயினால் சீவனும் போன பொழுதிலே**[25]

கொச்சுமணி மாடம்மையின் இறுதியினைச் சித்திரிக்கும் உருக்கமானக் காட்சி இது. இவ்வாறு தனது அழகினால் உருவான விளைவிற்கு அண்ணன்மார்களை இழந்து தவிக்கும் அன்பும் பாசமும் உடைய அவலப் பாத்திரமாகக் கொச்சுமணி மாடம்மை அமைகிறாள் எனலாம்.

### கொச்சு மாறப்பப் பிள்ளை

அபிராமியின் அன்பிற்குரிய அண்ணன், தம்பிமாரின், தங்கையின் மாமன். அயோத்தி மகாதேவர் கோயிலிலிருந்து வேலையிழந்து சுசீந்திரம் வந்து, மன்னர் இராமவர்மாவிடம் அடி தொழுது உதவி வேண்டி நிற்கும் காட்சி காட்டப்படுகிறது. தங்கை அபிராமியை இராமவர்மா மணந்ததால் கிருட்டிணனாக யிருந்த இவர் புதுப்பெயர் பெறுகிறார்.

**அயோத்திப் பட்டணத்தில்**
**அடியாள் பேர் அபிராமி**
**அடியாள் தன்னுடன் பிறந்த**
**அண்ணன் கிருட்டிணத்தன்**[26]

தம்பிமார் படுகொலை செய்யப்பட்ட அதிர்ச்சியில் தங்கையும் மருமகளும் தற்கொலை செய்ய, "தனித்திருந்து என்ன பலன்?" என்று கூறி உடைவாள் ஊன்றி அதில் பாய்ந்து உயிர் விடுவதாகக் காட்சியமைகிறது. இவ்வாறு குடும்பப் பொறுப்பும் பாசமும் துணிச்சலும் உடைய அவலப் பாத்திரமாக அமைகிறார் இவர்.

### இராமக் கிருட்டிணக் குருக்கள்

இவர் தம்பிமாரின் நம்பிக்கைக்குரிய ஆதரவாளர். சுசீந்திரத்தில் வாழ்பவர். தம்பிமார் நெல்லை மன்னர் அழகப்ப முதலியாரிடத்தில் படையுதவி கேட்டு பயணம் போகும் வேளையில், தாயாரையும், தங்கையையும் இவரது வீட்டில் அடைக்கலமாக ஒப்படைத்துச் செல்வது காணலாம். திரும்பி வரும்போது மீட்டுச் செல்கின்றனர். குருக்கள் என்பார் கோயில் பூசைச் செயல்களில் ஈடுபடுபவராக அமையலாம். இவ்வாறு அடைக்கல நோக்கில் உதவி செய்பவராக இவர் அமைவது காணலாம்.

### நேர்ச் சிறுதுணை மாந்தர்

ஒருசில நிகழ்வுகளில் பங்கெடுப்பதாகக் குறிப்பிடப் பெறுபவர்களை நேர்ச் சிறுதுணை மாந்தர் எனக் குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும். பிச்சைக் கைப்பள்ளி நாயர், பொன்னிறவான்

நாயர், முண்டக்கண் பிள்ளை, சிவனாண்டி நாடான், குலசேகர நாடான், அம்மாண்டிவிளை முத்திருளன் நாடான், ஆயான், அண் ணாவி, வெஞ்சாமரக்காரன், குடைக்காரச் செறுக்கன் ஆகி யோர் இவ்வகையில் அடங்கும் துணை மாந்தராவர். இவர்களது பங்கு சிறியதாயினும் கதை முழுமைக்கும் செயல்பாட்டுக்கும் இவர்களையும் நம்பியே கதை அமைவது குறிப்பிடத்தக்கது. இவர்கள் பெரும்பாலும் தம்பிமார் தொடர்புடையச் செயல்பாடு களில் பங்கெடுப்பதாகக் காட்டப்படுவதால் தம்பிமாரின் பண்பு நல அமைப்பிற்கு உதவுபவராகவும் அமைவது குறிப்பிடத்தக்கது.

## நேர்க்குழு மாந்தர்

நேர்த்தலைமை, துணைமை மாந்தரின் செயல்பாடுகளில் உதவுபவர் இவர். கூட்டமாக வந்து போவதால் குழுமாந்தர் என அறியப்படுவர். இராமவர்மா, தம்பிமார், அழகப்ப முதலியார் ஆகிய நேர்ப் பாத்திரங்களின் படையும் பரிவாரமும் இவ்வகையில் அடங்குவர். மந்திரிமார், குஞ்சுக் கூட்ட நாயன்மார், வெள்ளித் தடிக்காரர்கள், கொல்லச் சேவுகர்கள், கொல்ல வில்லவர்கள் ஆகியோர் இராமவர்மாவின் படைப் பரிவாரங்களைச் சார்ந்தவராவார்.

குஞ்சுக் கூட்ட நாயன்மார் குஞ்சு தம்பியின் நாயர் படை வீரர்களாகயிருக்கலாம். வெள்ளித் தடியுடன் மன்னருக்குப் பாது காவல் செய்பவர்கள் வெள்ளித் தடிக்காரர்கள் என அழைக்கப் பட்டிருக்கலாம். கொல்ல வில்லவர்கள் சேவுகர் ஆகியோர் இரும் புப் பட்டறை, ஆயுதத் தயாரிப்புப் பணியினைச் செய்யும் கொல்லர் கள் எனலாம். மஞ்சள், காக்கி, வெள்ளைச் சட்டைக்காரர்கள், கூட்ட நாயக்கன்மார், பிரதி பிள்ளைமார், காரியக்காரர், வட்ட விசிறிக்காரர் ஆகியோர் தம்பிமார் கூட்டக் காவலராகவும் வீரராகவும் பணியாளராகவும் அமைவது காணலாம்.

பல்வேறு நிறச் சட்டைக்காரர்கள் பல்வேறு வகைப் படையினராகலாம். நாயக்கன்மார், தம்பிமார் பாதுகாவலுக்கு அழகப்ப முதலியார் ஏற்படுத்தியக் காவலர்களாகலாம். பிரதிமாரும் காரியக்காரும் தம்பிமாரின் நிர்வாகப் பணியைச் சார்ந்த அரசப் பணியாளர்களாகயிருக்கலாம் என்பதும் கணிப்பு.

கம்பளத்து ரெட்டியார், பட்டாணியர், வன்னியர், சென்னியர் ஆகியோர் அழகப்ப முதலியாரின் கூட்டத்தவராகக் கூறப்படும் குழு மாந்தராவர். அக்காலத்தில் இனம் சாதிவாரியாக படையமைப்புப் பெற்றிருந்ததை இந்நிலைச் சுட்டியமைவதாகும். இவர் தவிர ஊரார், நாட்டார், கரையாளர், குறுப்புமார், ஆச்சிமார், மங்கைமார், தோழியர் ஆகியோரும் சுட்டப்படுவது காணலாம். பெரும்பாலான குழு மாந்தர் போர் வீரர்களாக அமைந்து கதை நிகழ்வுகளுக்குத் துணை நிற்பது குறிப்பிடத்தக்கது.

## எதிர் மாந்தர்

நீதிக்கும் உண்மைக்கும் எதிரான செயல்பாடுகளில் ஈடுபடு பவர்கள் இவர்கள் எனலாம். நேர்மாந்தர்க்கு நேர்மாறானவர்கள் ஆதலின் இப்பெயர் பெற்றனர் எனலாம். தம்பிமார் கதையில் எதிர்மாந்தராகச் சிலரே குறிப்பிடப் படுகின்றனர். எதிர்த்தலைமை மாந்தராக மன்னர் மார்த்தாண்ட வர்மாவும் எதிர்த்துணை மாந்தராக வர்மாவின் அமைச்சர்கள், படைத்தளபதிகள், பணியாளர் ஆகியவர்களும் சுட்டப்படுவது காணலாம்.

## எதிர்த்தலைமை மாந்தர் : மன்னர் மார்த்தாண்ட வர்மா

திருவிதாங்கூர் மன்னராயினும் முந்தைய மன்னர் இராமவர்மாவின் மக்களான தம்பிமாரின் உரிமையை மருமக்கட்தாய முறையின் பேரில் தட்டிப்பறித்து ஆட்சியுரிமை பெற்ற காரணத்தால், மார்த்தாண்ட வர்மா கதைப்பாடலில் எதிர் மாந்தராகவே சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. ஆற்றிங்கல் தம்புராட்டியின் மகனான இவர் அரசுரிமைக்காக இராம வர்மாவின் மருமகனாகத் தத்தெடுக்கப்படுகிறார். இராமவர்மா இறக்கும் தறுவாயில் தம் மனைவி, மகள், மக்களான தம்பிமாரை இவரிடம் ஒப்படைத்துப் "பிழை செய்யினும் பொறுத்தருளுமாறு" வேண்டுகிறார்.

ஒரு தடவை தம் மாமா வாழ்ந்த இரண்யசிங்க நல்லூர் படைவீட்டிற்குச் செல்லும் வழியில் வள்ளியாற்றில் மங்கை யொருத்தி நீராடுவதை மன்னர் காண நேரிடுகிறது. அவளது அழகில் மயங்கியவர் மந்திரியிடம் அவள் பற்றிய விபரங்களை

விசாரிக்க, அவள் தனது முறைப்பெண் கொச்சுமணி மாடம்மை என்பதை அறிகிறார். உடனே மைத்துனர்களான தம்பிமாரிடம் பெண் கேட்டுத் தூது விடுகிறார்.

"துருவத்தில் பிறந்தார்க்கு இல்லத்தில் பெண் கொடுப்பதில்லை" என்று மக்கட்கு அரசுரிமையில்லா தாய முறையைக் காரணம் காட்டி மறுத்து விடுகிறார்கள் தம்பிமார். இதனால் ஆத்திரமும் அவமானமும் அடைந்த மன்னர் பழி தீர்க்கத் திட்டமிட்டுத் தமது மாமா இராமவர்மாவின் பள்ளி மெத்தையைச் சிங்கநல்லூர் படைவீட்டிலிருந்து எடுத்துவரக் கட்டளையிடுகிறார். பள்ளி மெத்தையை பட்டன்மார் எடுத்து வெளியேற, அதைப் பார்த்த குஞ்சுதம்பி வேகத்தில் பாய்ந்து மெத்தையைக் கத்தியால் கீறி எறிந்து விடுகிறார். மேலும் மேலும் அவமானமுற்ற வர்மா, தம்பிமாரின் சொத்துக்களையும் நிர்வாக நிதி உரிமைகளையும் பறித்து, "கண் முன் நிற்கிாதீர்கள்" என்று கூறி விரட்டிவிடுகிறார்.

அவமானமுற்ற தம்பிமார் அரசுரிமையோடு சொத்து, நிர்வாக, நிதியுரிமைகளையும் இழந்த கோபத்தில் பெரும் நிதிக் குவியல்களை எடுத்துச் சென்று, நெல்லை மன்னர் அழகப்ப முதலியாரைக் கண்டு, ஒப்படைத்துப் படையுதவி வேண்டு கின்றார். நாஞ்சில் நாட்டில், சுசீந்திரம் கோயிலில் கொள்ளை யிடவும் அனுமதி வழங்குவதாகக் கூற, முதலியாரின் படை புறப்படுகிறது. இரு படைகளும் திருவிதாங்கோட்டின் அருகில் மோதிப் போரிடுகின்றன.

திடீரென்று வர்மாவின் படை வீரர்களான நாயர் மாடம்பிமார் பின்வாங்க, திருவிதாங்கூர் படை புறமுதுகு காட்டுகின்றது. வர்மா பத்மநாபபுரம் கோட்டைக்குள் ஓடி மறைகிறார். எதிர்ப் படை முற்றுகையிட அங்கிருந்து, மயிலாடும் பொத்தை வழி ரகசியமாக வெளியேறி, குதிரையில் தப்பிச் செல்கிறார். அவரைப் பின் தொடர்ந்த குஞ்சு தம்பி சாரைக்கோட்டுபாதையில் தடுத்து நிறுத்தி, ஓங்கி வாளால் வெட்ட முயல, அழகப்ப முதலி "நாடாளும் மன்னரை நடுவீதியில் வெட்டுவது முறையன்று" என்று கூறித் தடுத்து விடுகிறார்.

ஆராரும் அறியாமல்
அழகப்பன் முதலி கய்யில்
கள்ளன் கன்ன மிட்டதுபோல்
கைகொடுத்தார் மன்னவரும்
கருவூலங்கள் கண்ட போது
கை நெகிழ்ந்தார் முதலியாரும்[27]

கையூட்டு பெற்ற முதலி தம்பிமாரை, வர்மாவுடன் நீல கண்டசாமிக் கோயிலில் உறுதிமொழி எடுக்கவைக்கிறார். கள்ளம் கபடமின்றித் தம்பிமார், "இந்த உயிர் உள்ளவரையில் ரண்டகம் செய்யமாட்டோம்" என உண்மையாகச் சத்தியம் செய்கின்றனர்.

நெஞ்சில் தோல்வியின் அவமானமும் வஞ்சகச் சூழ்ச்சியும் கொண்ட வர்மா, விரல் நகத்தினடியில் ஒரு ஈயை மறைத்து வைத்து, "ஈ உயிர் உள்ள மட்டும் ரண்டகம் செய்யமாட்டேன்" என்று கூறி, மறுகணம் ஈயை நசுக்கிக் கொன்று விடுகிறார். சின்னாட்கள் கழித்துத் தந்திரத்துடன் முகம் காணிக்க வருமாறு தம்பிமாரை நாகர்கோவில் கொட்டாரத்திற்கு வரவழைக்கிறார். மகிழ்ச்சியுடன் தம்பிமார் புறப்பட, வழியில் குஞ்சுதம்பி நிர்வாக வேலைத் தொடர்பாகத் தாழக்குடி செல்கிறார். கொட்டாரத் திற்குள் நுழைந்த வலிய தம்பியிடம் நயமொழிகள் பேசி, உடைவாளைக் கையகப்படுத்திய வர்மா, சுசீந்திரம் கோயிலிலிருந்து கொள்ளையிட்ட பொருட்களைத் தருமாறு வேண்ட, வாக்குவாதம் முற்றி கைகலப்பு ஏற்படுகிறது.

வலிய தம்பி தனித்து நின்று தீரத்துடன் போரிட, பல படைவீரர்கள் வந்து அவரை வரிந்து கட்டிச் சிறைப் பிடிக்கின்றனர். மன்னர் கடாரியால் குரல்வளையை அறுத்து தம்பியைப் படுகொலை செய்கிறார்.

செய்தியறிந்த குஞ்சுதம்பி, உருவிய வாளுடன் ஓடிவந்து கொட்டாரத்தில் நுழைய, வாசலில் தட்டி, வாள் கைப்பிடியிலிருந்து நழுவி விடுகிறது. எனினும் நிராயுதபாணியாக நின்று வெந்திறல் வீரத்துடன் மற்போர் செய்ய, படைவீரர்கள் பலர் வந்து வரிந்து கட்டி மன்னர் முன் கிடத்த, அவரையும் கடாரியால் கழுத்தறுத்துப் படுகொலை செய்கிறார். செய்தியறிந்த தாயார்

தற்கொலை செய்து கொள்கிறார். தங்கை, தன் நாவைப் பிடுங்கியெறிந்து உயிர் விடுகிறார். மாமனும் சுயமே கழுவிலேறிவிடுகிறார்.

மார்த்தாண்ட வர்மா தம்பிமார் கதையில் தந்திரமும் வஞ்சகச் சூழ்ச்சியும் பழி தீர்க்கும் எண்ணம் உடையவராகவும் அமைகிறார். இராமவர்மாவின் இறுதிமொழிக்கு மாறாக அவர், ராமவர்மாவின் மக்களின் எல்லா உரிமைகளையும் பறித்து, நிராயுதபாணியான அவர்களைப் பலரால் கைது செய்து, வரிந்து கட்டிப் படுகொலை செய்வது அவரது கொடூரக் குணத்தையும் அநியாய நிலையையும் காட்டுவதாகும். கதை கேட்கும் நாட்டுப்புற மக்களின் மனநிலைக்கேற்ப, தம்பிமாரை நியாயப்படுத்தும் நோக்கில் மார்த்தாண்டவர்மாவின் பாத்திரப் படைப்பு அமைந்துள்ளது எனலாம்.

## எதிர்த்துணைமை மாந்தர்

எதிர்த் தலைமை மாந்தரின் செயல்பாடுகளுக்கு ஆக்கமளித்து உதவுபவர்கள் எதிர்த்துணைமை மாந்தர். தம்பிமார் கதையில் சுட்டப்படும் எதிர்த்துணைமை மாந்தரின் குணநலன் விளக்கம் இடம் பெறவில்லை. ஒரு சில செயல்களில் ஈடுபடுபவர்களாகக் குறிப்பிடப்படுகின்ற நிலை காணப்படுகிறது. மந்திரி கொச்சுரவி மார்த்தாண்டப் பிள்ளை, மந்திரி கிருட்டிண கேசவன், சாரக்கோட்டு பேயிக் குறுப்பு, கழக்கூட்டத்து பிள்ளை, கொச்சு பிள்ளை, வெள்ள நாட்டு' வீரபாகு பிள்ளை, நெடு மங்காடு நீலகண்ட பிள்ளை, ஆனை வீரர் அனந்தபத்மநாபன் பிள்ளை, வெள்ளித்தடிக்காரர் ஆகியோர் இவ்வகையில் அடங்குபவர். இவர்கள் பெரும்பாலும் மன்னரின் போர்ச் செயல்பாடுகளுக்கு உதவுபவர்கள். இவர்களுக்கென்று தனிச் செயல்கள் இடம் பெறாமையால் பாத்திரப்படைப்பு அமைப்பு வளர்ச்சியும் சுட்டப் பெற இயலாததாகின்றது எனலாம்.

## எதிர்க்குழு மாந்தர்

கூட்டமாக வந்து எதிர்த்தலைமை மாந்தரின் செயல் பாடுகளுக்கு ஊக்கமளிப்பவர்கள் எதிர்க்குழு மாந்தராவர்.

தம்பிமார் கதையில் மந்திரிமார், மாடம்பிமார், பிள்ளைமார், ரெட்டியார்கள், பட்டன்கள், ஆசான்மார், பணிக்கன்மார், சேவுக்காரர்கள், கொல்லச் சேவுகர்கள் ஆகியோர் எதிர்க்குழு மாந்தராக இடம் பெறுவது காணலாம். இவர்கள் பெரும்பாலும் மன்னரின் போர்ச் செயல்பாடுகளில் துணைபுரிபவராகக் காட்டப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

## முடிவுரை

தம்பிமார் கதை வில்லுப்பாட்டு வடிவத்தில் அமைவதால், முன்னிருப்பவர்கள் செவிமடுக்கும்படியாகக் கதை எடுத்துரைக்கப்படுவது காணலாம். இந்தக் கதைக் கூற்றுமுறை தற்சார்பின்மையைச் சுட்டியமைகிறது.

மார்த்தாண்ட வர்மா பெண் கேட்க, தம்பிமார் திருமண மறுத்தலே கதைக்கருவாக நின்று கதைத் திட்டத்தை வளர்க்கிறது என்பது அறியப்படுகிறது. திருவிதாங்கூர் மன்னரின் சுசீந்திரம் யாத்திரையிலிருந்து கதை முறையாகத் தொடங்குகிறது. வர்மா, தம்பிமார் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் எழுந்த பூசலும் போராட்டமுமே கதைச் சிக்கலை ஏற்படுத்துவதும் கண்டறியப்படுகின்றது.

தம்பிமாரின் சொத்து, நிர்வாகம், நிதி உரிமைகளைப் பறித்தல். பின்னலை உருவாக்கிக் கதையை நகர்த்திச் செல்வதும் சுட்டப்படுகிறது. இராமவர்மாவின் பள்ளி மெத்தையை வர்மாவுக்கு அளிக்கத் தடுத்து, குஞ்சு தம்பி கத்தியால் கிழித்தெறிவதும் தம்பிமாரை கண்முன்னால் நிற்காதீர் என மன்னர் விரட்டுவதும் கதைப் பின்னலுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதாக அறியப்படுகிறது. தம்பிமார் மறுதுருவம் சென்று அழகப்ப முதலியாரிடம் படையுதவி கேட்பதும், முதலியாரின் படை நாஞ்சில் நாட்டு ஊர்களையும், கோவில்களையும் கொள்ளையிடுவதும், இரு படைகளும் எதிர்த்துப் போரிடுவதும் கதை வளர்ச்சிக்குக் காரணமாவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

போரில் வர்மா தோற்றுப் புறமுதுகு காட்டிப் பத்மநாபபுரம் கொட்டாரத்திற்குள் மறைந்திருப்பதும் அங்கிருந்து தப்பிச் செல்வதும் அவரை வெட்ட குஞ்சுதம்பி முனைவதும் ஆகிய

நிகழ்வுகள் கதையின் நிகழ்வில் நடக்கும் திருப்பங்களாக அடையாளம் காணப்படுகின்றன.

மன்னரை வாளால் ஓங்கி வெட்ட முயன்ற குஞ்சுதம்பியை முதலியார் தடுப்பதும், பெரும் பொருளை லஞ்சமாகப் பெற்று இரு கூட்டத்தாரையும் கோவிலில் சத்தியம் செய்ய வைப்பதும் கதைத்திட்டத்தின் திருப்பத்தின் உச்சநிலையைச் சுட்டுவதாகப் பதிவு செய்யப்படுகிறது.

தம்பிமாரைத் தந்திரமாக முகம் காட்ட அழைத்து நிராயுதபாணியான அவர்களை வரிந்து கட்டி மன்னர் கொலை செய்யும் செயல், கதை முடிவாக அமைவது எடுத்துரைக்கப் படுகிறது. தம்பிமாரின் பரிதாபகரமான இறப்பில் வருத்தமும் கவலையும் கொண்டு தாயார், தங்கை, மாமன் ஆகியோர் தற்கொலை மேற்கொள்வதும், இவர்கள் கயிலாய மலையில் மகாதேவர் அருள் பெற்றுப் புதுக்கூட்டத்து வாதையாக, இசக்கியாக, நீலியாக வழிபடும் தெய்வங்களாக மாறுவதும் கதை விளைவாகச் சுட்டப்படுகிறது. கதைக்கரு, கதைத் தொடக்கம், கதைப்பின்னல், கதை வளர்ச்சி, கதைத் திருப்பம், கதை விளைவு ஆகியவற்றின் அமைப்பே கதைத் திட்டமாக உருவாவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

தம்பிமார் கதையில் அமையும் நிகழ்வுகளின் நிலை, போக்கு, பொருளின் அடிப்படைகளில் கதைமாந்தர் அமைப்பு விளக்கப்படுகிறது. நேர்மாந்தர், எதிர்மாந்தர் எனும் பாகுபாட்டின் அடிப்படையில் நேர்த் தலைமை, நேர்த்துணைமை, நேர்க்குழு, எதிர்த்தலைமை, எதிர்த்துணைமை, எதிர்க்குழு மாந்தர் என்ற வகைப்பாடு சுட்டப்படுகிறது. நிகழ்வுகள், செயல்பாடுகள், குணநலன்கள் ஆகியவற்றின் அடிப்படையில் நேர்த்தலைமை மாந்தராகத் தம்பிமார் அடையாளங் காணப்படுகின்றனர். இவர்கள் உரிமைக்காகப் போராடுபவராகவும், தாழ்வு வந்தவிடத்துப் பதறாது துணிச்சலுடன் படையுதவி கேட்டுப் பயணம் செய்வதாக அமைவதும் விளக்கப்படுகிறது.

வாள்போரிலும் வாய்ப்போரிலும் மற்போரிலும் வல்லவராக அமைவதும் பதிவு செய்யப்படுகிறது. தாய், தங்கை, மாமனோடு

பாசம் மிக்கவராகவும், சத்தியத்தைப் பேணுபவராகவும், மனிதநேயம் மிக்கவராகவும் சித்திரிக்கப்படுவதும் எடுத்துக் காட்டப்படுகின்றது. எனினும் இவர்கள் பண்புநலன் அமைப்பில் பெரிய குறைபாடாக அமைவது முதலியாருக்கு நாஞ்சில் நாடு, சுசீந்திரம் கோயில் கொள்ளைக்கு உரிமையளித்தது எனலாம். இறுதியில் இவர்கள் வஞ்சகச் சூழ்ச்சியால் பரிதாபகரமான முறையில் கொல்லப்படுவது கதை கேட்போரிடம் பரிவை ஏற்படுத்துவதாக அமைவதும் கண்டறியப்படுகிறது.

பண்பு நலன் நோக்கில் நேர்த்துணைமை மாந்தராக அமைப் பவர்களில் இராமவர்மா, அழகப்ப முதலியார், அபிராமி, கொச்சு மணி மாடம்மை, கொச்சு மாறப்பப் பிள்ளை, இராமகிருட்டிணக் குருக்கள் ஆகியோர் பெருந்துணைமை மாந்தராகவும் ஏனை யோர் சிறுதுணைமை மாந்தராகவும் அமைவது அடையாளங் காணப்படுகிறது. இராமவர்மா பாசமும் பொறுப்பும் அழகியல் ஆர்வமும் உள்ளவராகவும் அழகப்பமுதலி பொருளாசையும், தந் திரமும் வீரமும் மிக்கவராகவும் காட்டப்படுவதும் கூறப்படுகிறது.

அபிராமியும் கொச்சுமணி மாடம்மையும் அழகின் பாசத்தின் வடிவங்களாகவும் அவலச் சோகச் சித்திரங்களாகவும் அமைவதும் சுட்டப்படுகிறது. கொச்சுமாறப்பபிள்ளை பொறுப்புள்ள அண்ணனாகவும் பாசமுள்ள மாமனாகவும் அமைவது எடுத்துரைக்கப்படுகிறது. சிறுதுணை மாந்தரின், நேர்க்குழு மாந்தரின் செயல்பாடுகள் குறிப்பிடப்பெறும் அளவில் அமையாததும் கூறப்படுகிறது.

எதிர்மாந்தரில் எதிர்த்தலைமை மாந்தரின் பண்புநலன் விளக்கம் மட்டுமே சுட்டப்படுகிறது. எதிர்த்துணைமை மாந்தரின் செயல்பாடுகள் மிகக் குறைவாகவே அமைவதும் சுட்டப் படுகிறது. பல்வேறு செயல்பாடுகளின் நோக்கில் மன்னர் மார்த்தாண்டவர்மா எதிர்த்தலைமை மாந்தராக அடையாளங் காணப்படுகிறார். இவர் வாக்குறுதியைக் காப்பாற்ற முடியாத வராகவும், பொய்ச் சத்தியம் செய்பவராகவும், சதி செய்து கொல்பவராகவும் காட்டப்படுவது ஆய்ந்தறியப் படுகின்றது.

போரில் புறமுதுகு காட்டும் கோழையாகவும் பயந்து ஓடுபவ ராகவும் அமைவதும் விளக்கப்படுகிறது. முதலியாருக்குக்

கையூட்டளிப்பது இவரது சமயோசிதத்தையும் சந்தர்ப்பவாதத்தையும் சுட்டியமைவதும் எடுத்துரைக்கப்படுகிறது. எதிர்க்குழு மாந்தர் கூட்டமாக வந்து எதிர்த் தலைமை மாந்தரின் செயல்பாடுகளுக்கு துணைபுரிபவராக அமைவதும் ஆய்ந்தறியப் படுகின்றது.

## குறிப்புகள்

1. லூர்து. தே, நாட்டார் வழக்காறுகள், ப. 77
2. த.மா.க, வரி. 773-778
3. லூர்து. தே, முன்னது, ப. 84
4. மீரான் பிள்ளை. எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 87
5. த.மா.க, வரி. 9-10
6. பெருமாள். அ.நா, தமிழில் கதைப்பாடல், ப. 33
7. த.மா.க, வரி. 887-889
8. மேலது, வரி. 978 - 979
9. லூர்து. தே, முன்னது, ப. 113
10. த.மா.க, வரி. 1272-1274
11. லூர்து. தே, முன்னது, ப. 88
12. த.மா.க, வரி. 1681-1684
13. மேலது, வரி. 1876-1877
14. திரிவிக்ரமன் தம்பி. ஜி. தெக்கன்பாட்டுகள் - ஒரு படனம் (மலை) ப. 36
15. த.மா.க, வரி. 1685-1688
16. மேலது, வரி. 560-584
17. மேலது, வரி. 1590-1609
18. மேலது, வரி. 1261-1270
19. மேலது, வரி. 1635-1675
20. மேலது, வரி. 901-905
21. மேலது, வரி. 1204-1298
22. மேலது, வரி. 1-10
23. லூர்து. தே, (பதிப்பர்) நாட்டார் வழக்காற்றியல், ப. 105
24. மேலது, வரி. 1739-1742
25. மேலது, வரி. 1790-1795
26. மேலது, வரி. 71-72
27. மேலது, வரி. 1288-1289

# இயல் - ஐந்து

# நாட்டுப்புறயியல் வீரயியல் கூறுகள்

## முன்னுரை

தம்பிமார் கதைப்பாடல் ஓர் நாட்டுப்புறப் போர்க்கதைப் பாடலாதலின் நாட்டுப்புறயியல் கூறுகளும் வீரயியல் கூறுகளும் மிகுந்துள்ளன எனலாம். எழுகின்ற மண்ணின், வாழ்கின்ற மக்களின் மணமும் குணமும் நாட்டுப்புற இலக்கியங்களில் இடம் பெற்றமைவது இயல்பு. மீண்டும் வருதல், அடுக்கி வருதல், உரை நிலை, வழக்கியல் வருணனை, உவமை போன்றவை மொழி யமைப்பு நோக்கில் இடம் பெறும் நாட்டுப்புறயியல் கூறுகளாகும். இவை தவிர கதையெழுந்த காலத்தில் அமைந்த பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் சமூக அமைப்பு நோக்கில் இடம் பெறும் நாட்டுப்புறயியல் கூறுகளாகும். இந்நிலை தம்பிமார் கதைப்பாடலிலும் இடம் பெற்றமைவது குறிப்பிடத்தக்கது.

போர்க் கதைப்பாடல்களின் வீரயிலக்கியத் தன்மையைச் சுட்டும் வகையில் இக்கதைப்பாடலில் தூது, படையணி, படைப்பயணம், சூறையாடல், வஞ்சினம், படை முகாம், முற்றுகை, போர், களநிலை, சிறைப்பிடித்தல், வென்றி ஆகிய வீரயிலக்கியக் கூறுகளும் இடம் பெற்றமைவது காணலாம்.

### நாட்டுப்புறயியல் கூறுகள்

கிராமிய மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் போன்ற சகலவிதமான அம்சங்களும் நாட்டுப்புறக் கதைப்

பாடல்களில் இடம் பெறும்[1]. நாட்டுப்புற மக்களின் வாழ்வியலில் இவை வழங்கப்படுவதால் வழக்காறுகள் என அறியப் படுகின்றன[2]. திருவிதாங்கூர் பகுதியில் எழுந்த வில்லுப்பாட்டு இலக்கியமான தம்பிமார்கதையில் இத்தகைய நாட்டுப்புறயியல் கூறுகள் இடம் பெற்றமைவது காணலாம். பிறப்பு, தாலாட்டு, திருமணம், இறப்பு, ஒப்பாரி, கல்வி, பாதம் பணிதல், விடைபெறுதல், உலா, முகம் காட்டுதல், குரவையிடுதல், ஆடையணி பூணுதல் ஆகியவை நாட்டாரியல் பழக்க வழக்கங்களாக அடையாளம் காணப்படுகின்றன. சகுனம், சோதிடம், விதி, கெட்ட காலம், சத்தியம் செய்தல், தெய்வ மாக்கல் ஆகியவை நம்பிக்கைகளாக கண்டறியப்படுகின்றன.

## பழக்க வழக்கங்கள்

சமூகப் பண்பாட்டின் பகுதியாக அமையும் செயல்பாடுகளே பழக்க வழக்கங்களாகும். பாமர மக்களின் அன்றாடப் பழக்க வழக்கங்கள் கதைப்பாடலில் இடம் பெறுவது இயல்பு[3]. வழக்கமாகப் பழகிவரும் செயல்பாடுகளே பழக்கவழக்கம் எனப் பெயர் பெறுகின்றன. தம்பிமார் கதைப்பாடலில் காணப்படும் பிறப்பு, தாலாட்டு, திருமணம், இறப்பு, ஒப்பாரி, பழமொழி, கல்வி, பாதம் பணிதல், விடைபெறுதல், உலா, முகம் காட்டுதல், குரவையிடுதல், ஆடையணி பூணுதல் ஆகிய பழக்க வழக்கங்கள் இங்கு ஆய்ந்தறியப்படுகின்றன.

## பிறப்பு

வாழ்வின் தொடக்கமும் அறிமுகமும் சமூகப் பிரதிநிதித்துவ வாய்ப்பும் பிறப்பில் அமைகிறது. மகிழ்ச்சிக்குரிய இந்நிகழ்வு கதைப்பாடல்களில் சிறப்பாக விளக்கப்படுவதுண்டு[4]. தம்பிமார் கதைப் பாடலிலும் பிறப்பு சிறப்பித்துரைக்கப்படுகிறது. இராமவர்மாவின் துணைவி அபிராமி தம்புராட்டி ஈஸ்வரன் மாயவனின் திருவருளால் கர்ப்பமுறுவதாகக் காட்டப்படுகின்றது. மெய் நோக மருத்துவச்சி வந்து பேறு பார்க்க,

**வலது கையில் சங்கு சக்கரம்**
**மாந்தளிர் போல் மேனியுமாய்**

வையகம் தழைக்க உலகையாள
வந்து பிறந்தார் பாலகனார்[5]

மன்னர் மனம் மகிழ சோதிடனுக்கும் தட்டானுக்குமாகப் பரிசுகளும் வழங்குகிறார். இருபத்தெட்டாம் நாள் அரைஞாண் ஆபரணம் அணிவிக்கப்படுகிறது. 'வலிய தம்பி' என மன்னர் திருநாமம் சூட்டுகிறார். இவை பிறப்புத் தொடர்பான சடங்குகளாக இடம் பெற்றமைகின்றன. பிற்காலத்தில் இந்தக் குழந்தை பரிதாபகரமாகக் கொலையுண்டு இறக்கப் போவதால் இப்பிறப்பு இவ்வாறு சிறப்பாகச் சித்திரிக்கப்படுகிறது எனலாம்.

### மணம்

சமூக வாழ்வின் உருவாக்கத்திற்கும் மேம்பாட்டிற்குமான முக்கிய நிகழ்ச்சி திருமணம் எனலாம். மணம் வேண்டுதல், மணம் முடித்தல், மணம் மறுத்தல் ஆகிய செயல்பாடுகள் கதையின் ஓட்டத்தில் முக்கியத்துவம் பெற்றமைகின்றன.

பட்டுக் கச்சைகள் தன்னை வருத்தியே
பாரமன்னர் திருக்கையினால் தொட்டு
அபிராமி தன்னை யழைத்தல்லவோ
ஆயிழைக்கு பருவட்டம் சார்த்தினார்[6]

மந்திரிமார்கள் பரிவாரங்கள் சூழச் சங்கீத ஓசை முழங்க அயோத்தியிலிருந்து வந்த அபிராமியை மன்னர் மணம் முடிக்கும் நிகழ்ச்சி பண்பாட்டு நோக்கில் சித்திரிக்கப்படுவது காணலாம். அபிராமிக்கு மூன்றாவதாகப் பிறந்த கொச்சுமணி மாடம்மையின் பதினாறாவது வயதில் மன்னர் பெண்கேட்க, சகோதரர்கள் மறுத்துவிட்டதால் பெரும் பூசலும் போரும் உருவாகி இறுதியில் தம்பிமார் குடும்பம் பூண்டோடு அழிந்து படுகிறது. இவ்வாறு மணம் தம்பிமார்கதையில் போராட்டத்தை உருவாக்கி வளர்த்து அழிவிற்குக் காரணமாகிறது எனலாம்.

### தாலாட்டு

உலகில் ஒரு மனிதன் முதன்முதலில் கேட்டு ரசிக்கும் இனிமையான பாடல் தாயின் தாலாட்டு. தாயின் மடியிலிருந்து

தொடங்கி நாவில் நிலைபெறும் இத்தகையப் பாட்டு நாட்டுப்புற இலக்கியத்தின் மூலமுதல் வடிவமாகும். தாய் தன் மடியோடு குழந்தையையும் அசைத்து அல்லது தொட்டிலில் கிடத்தித் தொட்டிலை அசைத்தும் நாவைச் சுழற்றிப் பாடுதல் தாலாட்டு ஆகும்[7]. தம்பிமார் கதையிலும் தாலாட்டு சித்திரிக்கப்படுவது காணலாம்.

**பொன்னிலங்கும் மேனியனோ?**
**புவி தனையும் ஆளவென்று**
**மண்ணிலங்கவே யுதித்த**
**வலிய தம்பி ரா ரா ரோ[8]**

என்று தோழிமார்கள் சூழ்ந்து நின்று குழந்தை வலிய தம்பியைக் குதூகலத்துடன் தாலாட்டும் காட்சி இடம் பெறுகிறது. கதையிறுதியில் வாழ்விறுதியைச் சந்திக்கும் பரிவு நோக்கி இந்த வாழ்வியல் கூறு ஈங்குச் சுட்டப்படுவதாகக் குறிக்கலாம்.

## இறப்பு

இறப்பு என்பது இருப்பினைப் பொய்யாக்கும் வாழ்வின் இறுதிச் செயல்பாடாகும். தவிர்க்க முடியாத இந்த இறுதி, வாழ்வின் தொடக்கத்தைப் போல் கதைப்பாடல்களில் காட்டப்படுவது இயல்பு.

தம்பிமார் கதையில் இராமவர்மாவின் இறப்பு, தம்பிமாரின் இறப்பு, தாயார் தங்கை மாமன்மார் இறப்பு ஆகியவை விளக்கப்பெறுவது காணலாம். திருநாடு நீங்கி சிவலோகம் அடைந்ததாக இராமவர்மாவின் இறப்பு சுட்டப்படுகிறது. சந்தன மரங்கள் வெட்டி இறுதிச் சடங்குகள் நடந்ததாக விளக்கப் படுகிறது. 16ஆம் நாள் சடங்கும் 41ஆம் நாள் சடங்கும் வெகு விமரிசையாக நடத்தப்படுகிறது. படுகொலை செய்யப்பட்ட தம்பிமார், தாயார், தங்கைமார், மாமன் இறுதிச் சடங்கு இடம் பெறவில்லை. கயிலாயம் சென்று வரம் பெற்று தெய்வங்களான குறிப்பு மட்டுமே அமைகிறது. கதை நிகழ்வு நோக்கில் வரலாற்று நோக்கில் இத்தகையச் செய்திகள் இடம்பெறுவதாகக் கூறுவர்.

**ஒப்பாரி**

மனித உயிரின் இழப்பே இறப்பு எனப்படுகிறது. இழப்பின் துயரத்தை நெஞ்சில் அடக்கமுடியாமல் கண்ணீருடன் வெளியிடுவதே ஒப்பாரி ஆகும். ஓலப்பாட்டு என அறியப்படும் இப்பாட்டு நெஞ்சை நெகிழச் செய்வதாகும். பெரும்பாலான கதைப் பாடல்களின் முக்கிய மாந்தர் களத்தில் இறந்து படுவதால் ஒப்பாரி பெரும்பாலான கதைப்பாடல்களில் இடம் பெற்றமைவது காணலாம்[8].

**காரார் கருங் குழலாள்**
**கன்னி செந்தாமரை யழகாள்**
**வீறான தங்கையரும்**
**வீராட்டமாய் அழுதாள்!**
**அழுதாளே யென் பிறப்போ**
**இனியார் எந்தனுக்கு?**
**பக்கத் துணையு மில்லை**
**பதறாதே யென்பதற்கு[9]**

மோதி முட்டிப் புரண்டு ஒப்பாரி வைக்கும் கொச்சுமணி மாடம்மை பற்றிய சித்திரிப்பு இது. "தங்கையுடன் மாலை மணமதுவுந்தான் காண விதியில்லையோ? இடையிலே இறப்பெழுதி ஈசுவரனார் விதித்தானோ?" எனப் பேடுற்ற, கறையானுற்ற, தலைசரிந்த மரம் போல், சாவியிட்ட பயிர்போல் தாயாரும் அவலமோங்க ஒப்பாரி வைக்கிறாள். இறப்பின் விளைவாக அமைந்த இச்சடங்கு கதையோட்டத்தில் ஒரு பரிவும் அவலமும் சோகப் பின்புலமும் படைத்துக் கேட்போருக்கு உருக்கம் தருவது காணலாம்.

**பழமொழி**

பாமரர்கள் பழக்க வழக்கங்களில் பயிலப்பட்டுவரும் மரபுத் தொடர்களும் வாக்கியங்களுமே பழமையான மொழிகள் ஆகும். பரம்பரை பரம்பரையாகக் கூறப்பட்டு வரும் பழமையான மொழி பழமொழி ஆயிற்று. பழம் போல் சொல்ல வந்த கருத்துக்களை மென்மையாகவும் இனிமையாகவும் தருவதாலும் இப்பெயர்

பெற்றது. இவை கதைப்பாடல்களில் இடம் பெறும்போது கருத்து விளக்கத்தோடு சுவையூட்டவும் செய்வது குறிப்பிடத்தக்கது[10]. தம்பிமார் கதையில் சில பழமொழி வாக்கியங்களும் சில பழமொழித் தொடர்களும் இடம் பெற்றமைவது காணத்தக்கது.

முறைப் பெண்ணான தம் தங்கையை மன்னர் மணம் செய்ய விரும்பித் தூதுவிட, தம்பிமார் மறுத்துவிட்டனர். இந்நிலையில் எழுந்த பழமொழி, "மன்னன் திருவாக்கிற்கு மறுவாக்கு சொல்லலாமோ?" என்பது.

வர்மாவின் சதித்திட்டம் அறியாது மன்னரிடம் முகங்காட்டச் செல்லும் வலிய தம்பியின் நிலை, "கெட்ட விதியானது கேடு வரும் காலமதில்" என்று சுட்டப்படுவது காணலாம். தாகத்திற்குத் தண்ணீரும் இல்லையா? இதென்ன கலியுகமா? ஆகிய பழமொழி தொடர்பான வாக்கியங்களும் தொடர்களும் இடம் பெறுவதும் காணத்தக்கது.

**கல்வி கற்பித்தல்**

கல்வி பயிற்றுவித்தல் இளமையில் நடந்தேறும் ஒரு வாழ்வியல் நிகழ்வாகும். கதைப்பாடல்கள் சில தம் கதை மாந்தர்களின் குணநல வளர்ச்சியைச் சுட்டும் நோக்கில் கல்வி பயிலுதல் சித்திரிக்கப்படுதல் காணலாம். தம்பிமார் கதையில் தம்பிமார்க்குக் கலை, இலக்கியம், கணக்கு, மொழி, யானை, குதிரையேற்றம் ஆகியவை ஆயன்மாரால் அண்ணாவிமாரால் பயிற்றுவிக்கப்படும் காட்சி விளக்கமாகக் கூறப்படுகிறது.

**மலப் போரும் கைப்போரும்**
**வளமொடு பூட்டுகள் பூட்டுற முறையும்**
**கை முறைகள் பூட்டுற முறையும்**
**கால் மாறி தட்டுற முறையும்**
**வர்ணத் தட்டு தட்டுற முறையும்**
**மறுபடி சென்று எழும்பிற முறையும்[12]**

தம்பிமார் பயின்ற மற்போர், சிலம்பம், களரி கல்வி பற்றிய முழு விளக்கம் இது. பண்பாட்டின் தலையாயச் சிகரம் கல்வி கற்றல் ஆனதனால் இது இவ்வாறானது எனலாம்.

### பாதம் பணிதல்

மரியாதை, பாசம், பணிவு, நன்றி காரணமாகப் பெரியோர் அடிபணிதல் நடைபெறுகிறது. பாரம்பரிய வாழ்வுப் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாக அமையும் இச்செயல்பாடு தம்பிமார் கதையிலும் இடம்பெறுவது காணலாம். தம்பிமார் தந்தை இராமவர்மாவின் முன்னில் சென்று "கைகூப்பி நமஸ்கரித்து அடி தொழுது சேவித்ததாக" நூல் குறிப்பிடுவது காணலாம். தாயாரின் பாதங்களைத் தம்பிமார் அடி பணிவதும் காட்டப் படுகிறது. இது தன்னடக்கத்தையும் தன்மரியாதைையயும் சுட்டும் செயல்பாடு என்பாரும் உளர்.

### விடைபெறல்

ஒருவரைச் சந்தித்த பின் பிரியும்போதும், பிரயாணத்தில் ஏற்படத் திரும்பும் போதும் விடைபெறல் நிகழ்கிறது. இது அன்பு, பாசம், மதிப்பு, மரியாதை, உயர்ச்சி காரணமாக நிகழ்வதாகவும் இதனால் எதிர்பார்த்த காரியம் நடக்கும் என்ற உணர்வு நெஞ்சில் எழுவதால் நம்பிக்கை தருவதாக அமைகிறது. தம்பிமார் கதையில் விடைபெறும் நிகழ்வுகள் சில சுட்டிக் கூறப்படுவது காணலாம். வர்மாவிடம் முகம் காட்டச் செல்லும் தம்பிமார் 'சாத்திரை விடைவாங்க' தாயார் முன்னில் வந்ததாக செய்தியமைகிறது. தாயாரும் "சாத்திரையும் தானனுப்பி தம்பிமார்க்கு விடை கொடுத்தார்". யாத்திரைக்குக் கொடுப்பது சாத்திரை. சாத்திரை எனும் வழக்குச் சொல் 'விடைபெறல்' எனும் பொருளில் அமைவதாகும். இது ஒரு கதை மாந்தரின் உயர்ந்த பண்பினை உளநிலையைச் சுட்டியமைவதாகும்.

### உலா வருதல்

மன்னர்கள் திருவிழா நேரங்களிலும், ஆறாட்டு எனும் தீர்த்த யாத்திரை வேளைகளிலும் ஊர் காண உலா வருதலுண்டு. நாடு நகரப் பயணம் நடத்துவதுண்டு. இவ்வுலா சமய, விழா, குடிகள் சந்திப்பு நோக்கில் அமைவதாகும். தம்பிமார் கதையிலும் மன்னர்களின் இனிய உலா சித்திரிக்கப்படுகிறது. இராமவர்மா தம்புரான் சுசீந்திரம் கோயில் திருவிழா காண,

சேனை பெரும் படை பரிவாரங்களுடன் உலா வருவதாகக் காட்டப்படுகிறது. வாலியான்பாறை தீர்த்தத்தில் நீராடவும் இவர் உலா செல்வது காணலாம். உலா ஓர் அரசியல் சமய சமூகப் பண்பாட்டு நிகழ்வாக அமைவதாகும்.

## முகம் காட்டல்

மன்னரை பிரஜைகள் தமது தேவைக்காகச் சென்று காண்பது 'முகம் காட்டுதல்' எனப்படுகிறது. சிலபோது மன்னரே சில தேவைகளுக்காகக் குடிகளை அழைப்பதுண்டு. தம்பிமார் கதையில் 'முகம் காட்டும்' செய்திகள் சில இடம் பெற்றமைகின்றன. தம்பிமார் தினமும் தந்தை இராமவர்மா முன் முகங்காட்டி நிற்கும் குறிப்பு உள்ளது. தம்பிமார் நாகர்கோவில் கொட்டாரத்திற்கு முகம் காட்டச் செல்லும் நிகழ்வு விளக்கமாக அமைகிறது எனலாம். இது ஓர் அரசியல் சமூகப் பண்பாட்டுத் தொடர்பு, மரியாதைச் செயலாகவும் கருதுவதற்குரியதாகும். இதனை சந்திப்பு, தரிசனம் என்ற பொருளில் கொள்ளலாம்.

## குரவை இடுதல்

வாயில் விரலைச் செலுத்தி நாவினைச் சுழற்றி ஒலியெழுப்புவதே குரவை எனப்படும். 'குரலை இடுதல்' என்பதே குரவையிடுதல் ஆயிற்று என்பர். பொதுவாக இது பெண்களால் செய்யப்படுதல் வழக்கம். மங்களகரமான நிகழ்ச்சிகளில் இக்குரவை நடைபெறுவது காணலாம். இதனால் அமங்கலக் குரல்கள் அமுக்கப்படும். மரண வீடுகளில் நடக்கும் குரவை சோகத்தை வெளிப்படுத்தும் நோக்கிலமைவதாகும். தம்பிமார் கதைப் பாடலிலும் குரவையிடுதல் செயல்பாடுகள் சித்திரிக்கப் படுவது காணலாம். இராமவர்மாவின் திருமணத்தின் போது சங்கீத நாதஸ்வர ஓசை முழக்கத்துடன் "மொகுமொகுவென்று குரவை முழங்கிட" எனச் சித்திரிக்கப்படுவது காணலாம். குரவை ஓர் ஒலிக்கருவியாகவும் கருதத்தக்கதாகும்.

## ஆடையணிகலன் பூணுதல்

சிறப்பு நாட்களிலும் நிகழ்ச்சிகளிலும் பட்டாடை அணிதலும் ஆயுதங்கள் ஏந்துதலும் நடைபெறுவதுண்டு. இது போர்க்

காலங்களிலும் அமையலாம். அரச பரம்பரையிலுள்ள கதைமாந்தர் இடம்பெறும் கதைப் பாடல்களில் இதன் தாக்கம் அதிகம். தம்பிமார் கதை அரச பரம்பரைத் தொடர்பான போர்க் கதைப்பாடலாதலின் இத்தகைய ஆடையணிகலன் பூணுதல் பற்றிய சில வருணனைகளை அடையாளங் காணலாம்.

**கைக்கு வீரச் சங்கிலியும்**
**கழுத்தில் தங்கச் சரப்பணியாம்**
**ஆணியிட்ட முடுவுகளும்**
**அரயில் கச்சப்புறம் இலங்க**
**இடையில் வீர வாளிப்பட்டு**
**ஏத்த நல்ல பொன்னரஞ்ஞாண்**[13]

தம்பிமாரின் ஆடையணிகலன் பூணுதல் தொடர்பான சித்திரிப்பு இது. கேட்போர் சுவையார்வத்தை மிகுவிக்கவும் பாத்திரப் படைப்பு விளக்கத்திற்காகவும் இத்தகைய வருணனைகள் துணை செய்வனவாகும்.

## நம்பிக்கைகள்

சமூகம், சமயம் தொடர்பான அச்சங்கள் நீங்கி வாழ்வும் வளர்ச்சியும் பெற மக்கள் சில செயல்பாடுகளை மேற்கொள்கின்றனர். இச்செயல்பாடுகளால் தீங்குகள் நீங்கி நலம் பயக்கும் என நம்புவதால் இவை நம்பிக்கைகள் எனப்பட்டன. சகுனம், சோதிடம், விதி, சத்தியம், மீமானிடம், தெய்வமாக்கல் ஆகியன தம்பிமார் கதையில் இடம் பெறும் முக்கியமான நம்பிக்கைகளாகும்.

## சகுனம் பார்த்தல்

ராசி, நாள், நட்சத்திரம் இவற்றின் நல்ல, கெட்ட இணைவு நோக்கிச் செயல்களை நிறைவேற்றுதல் நாட்டுப்புற மக்களின் வழக்கமான நம்பிக்கையாகும். நினைத்த காரியம் நல்லபடி நடக்க, தீங்குகளும் தடைகளும் வராமல் தடுக்க இந்த நம்பிக்கைகள் நம்பி கை கொடுக்கின்றன. தம்பிமார் கதையிலும் சில சகுனம் பார்த்தல் நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளன. நாள், திவசம் பார்த்து உற்ற ராசியும் தம் பக்கம் என உறுதிப்பட்ட

பிறகே இராமவர்மா அயோத்தியிலிருந்து வந்த அடியாள் அபிராமியை மணம் முடிக்க முடிவு செய்கிறார்.

> மொட்டத் தலயும் உறுமியுமாய்
> மிகுந்த தொரு பார்ப்பானும்
> தீயும் இவன் கையில் கொண்டு வந்து
> தெருவதிலே வந்தெதுத்தான்.[14]

மார்த்தாண்டர் அழைக்க பத்மநாபபுரத்துக் கோட்டைக் குத் தம்பிமார் புறப்படும் நேரம் ஏற்பட்ட சகுனங்கள் பற்றிய விளக்கம் இது. எனினும் தம்பிமார்கள் 'வருவது வரட்டும்' எனத் துணிச்சலுடன் செல்வது காட்டப்படுகிறது. மக்களின் அகமன நிலைகளுக்கு உட்பட்டு இத்தகைய சகுனம் பற்றிய நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் ஊடுருவியுள்ளன.

### சோதிடம் பார்த்தல்

ஜோசியர்கள் எனும் வருங்காலக் கணிப்புக்காரர்களிடம் வாழ்வைக் கணித்தறிதல் பாமர மக்கள் வழக்கம். சோதிடம் கணித்தல், முகராசி கூறுதல், கைரேகை நோட்டமிடுதல், மையிட்டுப் பார்த்தல் போன்றவை அறிவியல் அடிப்படை யற்றவைகளாயினும் துன்பத்தில் உழல்வார்க்கு உறுதுணை செய்வதாக நம்பிக்கை உள்ளது காணலாம். இத்தகைய ஜோதிடம் பார்த்தல் கதைப் பாடல்களிலும் இடம் பெறுவதுண்டு[15]. தம்பிமார் கதையிலும் சோதிடம் பார்த்தல் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.

திருவிதாங்கூர் மன்னர் இராமவர்மா தமக்குப் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் உடனே வருங்காலம் அறிய சோதிடர்களை வரவழைக்கிறார். கொச்சுமணி மாடம்மையின் 16ஆவது வயதில் தம்பிமார் கொலை செய்யப்படுவர் என்பதையும் அறிகிறார். எனினும் அஞ்சாது தொடர்ந்து ஆட்சி செய்ய முயலுகிறார். குஞ்சு தம்பி, மார்த்தாண்ட வர்மாவைப் பின் தொடர்ந்து சென்று, வெட்டிக் கொல்ல முனைவதை "அஸ்ட்டமத்தில் சனியன், சந்திரனில் குருக்கள் நின்று சனியது பிடித்ததனால் கண்டத்திலே சனி வந்து கைகலந்ததாக" நூல்

குறிப்பிடுவது காணலாம். சோதிடத்தின் ஆதிக்கம் நூலில் தாக்கம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அக்கால மக்களின் சமயச் சமூக உளவியலின் பாற்பட்டது இது.

**விதி நம்பிக்கை**

எல்லாம் இறைவன் விதித்ததுபோல் நடக்கும் என்பதே விதியின் அடிப்படையாகும். விதியையும் மதியால் வெல்ல முடியும் என்பது அறிவியலாளர் நம்பிக்கை. முன்செயல்களின் விளைவாக இவை வந்துபோகும் என்பதால் ஊழ்வினை என்றும் கூறுவர். முற்பிறப்பில் தீமை செய்தவன் இப்பிறப்பில் அனுபவிப்பான் என்பதும் இப்பிறப்பில் நன்மை செய்தால் மறுபிறப்பில் சொர்க்கமாம் என்பது மறுவாழ்வு நம்பிக்கையாகும். விதி பற்றிய இத்தகைய நம்பிக்கை இலக்கியங்களில் இடம் பெறுவதுண்டு. ஊழ்வினை என்னும் விதி சிலப்பதிகாரம் காப்பியத்தையே நடத்திச் செல்வதும் காணத்தக்கது. கதைப் பாடல்களிலும் இந்நம்பிக்கை இடம் பெறுவதுண்டு. தம்பிமார் கதைப் பாடலிலும் இவ்விதியின் கோர ஆட்சியை அடையாளங் காண முடியும்.

நாகர்கோவில் கொட்டாரத்தில் மன்னரிடம் முகம் காண்பிக்க வஞ்சகச் சூழ்ச்சியை அறியாமல் செல்கிறார் வலிய தம்பி. இதனை "வரும் விதி அறியாமல் மாதாவு சாத்திரை அளித்ததாக" நூல் சுட்டுகிறது. வலிய தம்பியைக் கொலை செய்ததறிந்து தாழக்குடியிலிருந்து பாய்ந்து சிறிய தம்பி ஓங்கிய வாளுடன் மன்னரை வெட்ட முயல, வாசலில் பட்டு, வாள் கைப்பிடியிலிருந்து கழன்று விழுந்து விடுகிறது. மற்போராற்றிய அவரைக் காவலர்கள் வரந்து கட்டிச் சிறைப் பிடிக்கின்றனர். "உங்களுட விதி திவசங்கள் வந்ததுடா" என்கிறார் மார்த்தாண்ட வர்மா. மன்னரால் குரல்வளை அறுக்கப்பட்டுக் கோரமாகக் கொலை செய்யப்படும் குஞ்சுதம்பி "இதுவோ விதி" என உயிர் விட்டதாகச் சுட்டப்படுகின்றது.

நீங்கள் மாலையிட்டு பார்த்தீரில்லை
மாலை மணம் கண்டீரில்லை
இடையிலே இறப்பெழுத
ஈசு பரனார் விதித்தானோ?[15]

என்று தாயார் ஏங்கி யழுவதும் காட்சியாக்கப்படுகின்றது. சோதிடன் கூறிய கணிப்புப்படி ஒவ்வொரு நிகழ்வும் நடப்பதாகக் காட்டுவதும் விதியின் ஆட்சியை, தாக்கத்தை உணர்த்துவதாகும். அக்கால மக்களிடம் ஆழமாக ஊறியிருந்த விதி பற்றிய நம்பிக்கையின் வெளிப்பாடுகளாக இக்காட்சிகள் கதைப் பாடலில் இடம்பெற்றதாகக் கருதலாம்.

**சத்தியம் செய்தல்**

ஆணையிட்டுச் சத்தியம் செய்தலும், அதை உறுதியுடன் நிறைவேற்றுவதென்பதும் நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்தனவாகும். இத்தகைய உறுதியுரையை மீறுவது பாபம் என்பதும், மீறினால் கடவுள் தண்டனை வழங்குவார் என்பதும் நாட்டுப்புற மக்களின் மனத்தில் பதிந்துள்ள நம்பிக்கையாகும். இத்தகைய நிகழ்வுகள் தம்பிமார் கதையில் இடம் பெறுவதும் காணலாம்.

தம்பிமாருக்கும் வர்மாவுக்கும் நடக்கின்ற போரில், படைகள் பின் வாங்கத் தோல்வியுற்ற மன்னர், கோட்டைக்குள் ஓடி ஒளிந்து, இரகசியமாக அங்கிருந்து குதிரையில் தப்பிச் செல்ல, பின் தொடர்ந்த குஞ்சு தம்பி, சாரைக்கோட்டுப் பாதையில் வைத்து வாளால் ஓங்கி வெட்ட முயலுகிறார். அப்போது முதலியார் "நாடாளும் மன்னரை வெட்டிக் கொலை செய்தல் நீதியில்லை" என்று கூறித் தடுத்துவிடுகிறார். தொடர்ந்து தக்கலை நீலகண்ட சுவாமி கோயிலில் வைத்து இரு கூட்டத்தாரும் "இரண்டகம் செய்ய மாட்டோம்" என்று சத்தியம் செய்கின்றனர்.

மன்னர் தம் விரலிடுக்கில் ஒரு ஈயினை மறைத்து வைத்து "ஈ உயிர் உள்ள மட்டும் இரண்டகம் செய்யமாட்டேன்" என்று உறுதியுரைத்து அடுத்த கணம் ஈயை நசுக்கிக் கொன்று விடுகிறார்.

உண்மையான சத்தியத்தில் சதியும் சூழ்ச்சியும் நுழைய, தொடர்ந்து அது மீறப்படுவதை இந்நிகழ்வு சுட்டியமைகின்றது. நாவும் கரங்களும் மனமும் சத்தியத்திற்கு எதிராகச் செயல்படும்

நயவஞ்சகம் இங்குக் காட்சியாக்கப் படுகிறது. அக்கால நாட்டுப்புற மக்களின் சத்தியம் பற்றிய நம்பிக்கையின் பாற்பட்டு இவை அமைவதாகக் கருதலாம்.

**மீமானிட நிகழ்வு**

அதீதக் கற்பனை கலந்த இயற்கை இகந்த செயற்கை அதிசய நிகழ்வுகள் மீமானிட நிகழ்வுகள் என அறியப் படுகின்றன[17]. கதையோட்டத்தில் வியப்பையும் விறுவிறுப்பையும் ஊட்டும் இவை புராண இதிகாச இலக்கியங்களில் பேரளவு இடம் பெற்றமைவதுண்டு. கதைப் பாடல்களிலும் சுவையான இந்தக் கூறுகள் இடம் பிடிப்பதுண்டு. தம்பிமார் கதையில் சில மீமானிட நிகழ்வுகள் சுட்டப்படுவது காணத்தக்கது.

இராமவர்மா தமக்குப் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் சோதிடனை அழைத்து வருங்கால வாழ்வுப் பலன் கணிக்கிறார். "கொச்சு மாடம்மைத் தங்கையின் பதினாறாவது வயதில் தம்பிமார் மன்னரது கைகளால் படுகொலை செய்யப்படுவார்" என்று சோதிடன் ஜாதகப்பலன் கூறுகிறான். இது மீமானிடத்தில் பட்டதாகக் கருதுதற்குரியதாகும்.

பல்வேறு ஆறுகள் கடலில் கலக்கும் வாலியன்பாறை தீர்த்தத்தில் மன்னர் இராமவர்மா தீர்த்தமாடி கரையேறும் நேரத்தில் திடீரெனக் கடலலைகள் வர்மாவின் காலடியைத் தொடருகின்றன. இதனால் மனம் கலங்கிய மன்னர் விரலை முறித்துக் குருதியைக் கொட்டச் செய்ய கடலலை திரும்பிச் செல்வதாகக் காட்சியமைகிறது. இதனால் அந்த இடம் 'கடிகைப் பட்டணம்' எனப் பெயர் பெற்றதாகவும் சுட்டப்படுகிறது. மானிட ஆற்றலுக்கு அப்பாற்பட்ட இந்நிகழ்வு கதைச் சுவைக்காக அமைக்கப்பட்டதாகலாம்.

வாலியன்பாறை தீர்த்தத்தின் புண்ணியத் தன்மையைச் சுட்டும் சமய நோக்கில் ஏற்பட்டதாகலாம். வரலாற்றுக் கதைப்பாடலான தம்பிமார் கதைப்பாடலில் புராண நோக்கத்திலமைந்த பழமரபுக் கிளைக்கதையாக இந்நிகழ்வு சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

மார்த்தாண்ட வர்மாவால் படுகொலை செய்யப்படும் தம்பிமாரும், தற்கொலை செய்த தயார், தங்கை, மாமா ஆகியவர்களும் கயிலாயம் சென்று மகாதேவரைச் சந்தித்து உரையாடுவதும் மற்றதொரு மீமானிட நிகழ்வாகும்.

அவர்கள் அக்கினித் தூண் தழுவிச் சுத்தமடைவதும், மகாதேவனாரின் அருள் பெற்றுக் குட்டித் தெய்வங்களாக மாறுவதும் கூறப்படுகிறது. இது இந்து சைவ நம்பிக்கையின் பாற்பட்ட அதிசய நிகழ்வாக அமைவது குறிப்பிடத்தக்கது.

**தெய்வமாக்கல்**

கதைப்பாடல்களில் இடம் பெறும் சாதனை வீரர்கள் இறந்துபடும்போது சாதாரண மனிதர்களைவிட உயர்ந்த தெய்வ மனிதர்களாக மாற்றப்படுகின்றனர். அவர்கள் சொர்க்கத்தில் சென்று சுகமாக வாழ்வதாகவும் கதையை அமைப்பதுண்டு. இந்நிலையைத் தம்பிமார் கதையிலும் காண முடியும். மன்னரால் கோரமாகக் கொலை செய்யப்பட்ட தம்பிமாரும், அழுது அரற்றி உயிர்விட்ட கூட்டத்தினரும் கயிலாயத்தில் மகாதேவர் அருள் பெற்றுக் குட்டித் தெய்வங்களாக மாற்றப் பெறுகின்றனர்.

தம்பிமார் புதுக் கூட்டத்து வாதை என்றும், தாயார் புதுக்கூட்டத்து நீலி என்றும், தங்கை புதுக்கூட்டத்து இசக்கி என்றும் புதுப்பெயர் பெற்று வட்டாரக் குட்டித் தெய்வங்களாக மாற்றப்படுகின்றனர்.

குமரி மாவட்டத்தின் சில பகுதிகளில் இவர்களுக்குக் கோயில்களும் உள்ளன. நாட்டுப்புற மக்களின் சமயவுணர்வின் வெளிப்பாடாக இந்த இந்து சமய நம்பிக்கை நிகழ்வு அமைக்கப்பட்டது எனக் கருதலாம்.

**வீரயியல் கூறுகள்**

வீரக்கதைப் பாடல்கள் போர்த் தொடர்பானவையாதலின் அவற்றில் வீரயியல் கூறுகள் இடம் பெறுதல் இயல்பு. இவை போரின் பின்புலத்தில் அமையும் போர்த் தொடர்பான நிகழ்ச்சி விளக்கங்களாக அமையக் காணலாம். தம்பிமார் கதையும்

போர்த் தொடர்பான கதைப்பாடலாதலின் இதில் பல வீரயியல் கூறுகள் சித்திரிக்கப்படுவது காணலாம். தூது, படையணி, படைப்பயணம், சூறையாடல், வஞ்சினம், படைமுகாம், முற்றுகை, போர், களநிலை, சிறைப்பிடித்தல், வென்றி ஆகியன தம்பிமார் கதைப்பாடலில் இடம் பெற்றமையும் வீரயியல் கூறுகளாக அடையாளங் காணப்படுகின்றன.

## தூது

தாம் உணர்த்த நினைத்தவற்றைக் கடிதம் அல்லது ஆள் வாயிலாக அறிவிப்பதே தூது எனப்படும். படையுதவி வேண்டியும் சமாதான ஒப்பந்தத் தேவைக்காகவும் போரில் தூது பயன்படுத்தப்படுகிறது. இது கடிதம், ஆள் ஆகியனத் தனியாகவும் இணைந்தும் அல்லது நேரடியாகவும் அமையலாம்[18]. தம்பிமார் கதையில் சில தூதுகள் இடம் பெறுகின்றன.

மார்த்தாண்ட வர்மா பட்டன்மாரையும் வெள்ளித்தடிக் காரர்களையும் அனுப்பித் தம்பிமாரை அழைக்கும் காட்சி அமைகிறது. வந்த தம்பிமாரிடம் நேரடியாகத் திருமணத் தூதுரைக்கிறார் வர்மா. நாகர்கோவில் கொட்டாரத்தில் தம்பிமாரை அழைத்து வர மேற்கண்டவர்களுடன் கொல்லச் சேவுகரை அனுப்பி வைப்பதும் இடம்பெறுகிறது.

நெல்லை மன்னர் அழகப்ப முதலியிடம் படையுதவி பெற தம்பிமார் நேரடியாகத் தூது செல்வதும் காட்சியாக்கப் படுகின்றது. இவ்வாறு அரசியல், திருமணம், படையுதவி தொடர்பாகத் தம்பிமார் கதையில் தூது இடம் பெறுவதைக் காணலாம்.

## படையணி

போருக்குப் புறப்படும் முன்னர் பல்வேறு வகைப் படைகள் அணிவகுத்து நிற்பதைப் படையணி என்பர்[19]. இவர்கள் பல்வேறு இனத்தவராகக் காட்டப்படுவதும் உண்டு. போர்க் கதைப் பாடல்களில் படையணி வகுப்பு, படைவகைப் பிரிவு நோக்கிலும் இனவகைப் பிரிவு நோக்கிலும் அமையும். தம்பிமார் கதையிலும் படையணி சித்திரிக்கப்படுவது இடம் பெறுகிறது.

கம்பளத்தார் ரெட்டியரும்
கனத்தப் பட்டாணியருமாய்
வன்னியரும் சென்னியரும்
வடனாட்டு தூதப்பர்களும்[20]

என்பது இனம், நாடு சுட்டியமைந்த படைக் குழுவினரின் அணி பற்றிய செய்திச் சித்திரிப்பாகும். அழகப்ப முதலியின் படையணி மேற்கண்டவாறு சுட்டப்பட மார்த்தாண்டவர்மாவின் படைக் குழுவினராக 16 வீட்டுப் பிள்ளைமார் படையும் 16 வீட்டு மாடம்பிமார் படையும் காட்டப்படுவதும் காணலாம். போருக்கு முன் அமைந்த ஆயத்தச் செயல்பாடாகவும், படைப்பெருக்கைக் குறிக்கும் செய்தியாகவும் படையணி அமைகிறது எனலாம்.

**படைப் பயணம்**

எதிர் நாட்டை நோக்கிப் புறப்படும் படைகளின் போர் யாத்திரையே படைப்பயணம். போரிலக்கியங்களில் இவை இடம் பெறுவது இயல்பு[21]. தம்பிமார் கதைப்பாடலிலும் இக்கூறு இடம் பெற்றமைவது காணலாம். படைப்பயணத்தின்போது படைகள் கடந்து செல்கின்ற ஊர்களின் பெயர்கள் தம்பிமார் கதைப் பாடலில் விளக்குவதைக் காணலாம்.

அழகப்ப முதலியாரின் படை, பீரங்கி முழக்கத்துடன் திருநெல்வேலி, புத்தேரி, வடசேரி, சுங்கான் கடை, கள்ளியங் காடு, இரணியல் வழி திருவிதாங்கோடு வந்தடைவதாக விளக்கப்படுகிறது. இத்தகையச் சித்திரிப்புகள் போர்ச்சூழலை உருவாக்குவதில் பங்களிப்பதோடு கதை நீட்சிக்கும் காரணமாவது குறிப்பிடத்தக்கது.

**சூறையாடல்**

எதிர் நாட்டின் விளை பொருட்களையும் செல்வங்களையும் போர்ப் பயணத்தின்போதும் முற்றுகையின்போதும் கொள்ளை யிடுதல் என்பது போரோடு தொடர்புடையச் செயல்பாடுகளில் ஒன்றாகும். போர் வெற்றிக்குப் பின்னரும் எரியூட்டலுக்கு முன்னும் இது நடைபெறுவது வழக்கம். ஆனால் தம்பிமார் கதை யில் போர்ப்பயணத்தின்போதே சூறையாடல் நடைபெறுகிறது.

தம்பிமார்கதையில் அழகப்ப முதலியாரின் படைகள், செல்லும் பாதையிலுள்ள விளைபொருட்களையும் பிற பொருட்களையும் கொள்ளையிட்டுச் செல்வது காட்டப்படுகிறது.

**நாஞ்சில் நாட்டுப் பிடாகை யெல்லாம்**
**நன்றி யுடன் கொள்ளையிட்டார்**
**பன்னிரண்டு பிடாகையிலும்**
**பரந்தேறிக் கொள்ளையிட்டார்**[22]

சுசீந்திரம் கோவிலிலுள்ள சரப்பணி, பொன்மாலை, தங்கக் கொடி சருவம் சட்டிப் பாத்திரங்களும் கொள்ளையிடப் படுகின்றன. கொள்ளையிடுதல் போர் அறத்தின்பாற் பட்டதாயினும் இத்தகையச் சூறையாடல்கள் அறத்தை மீறிய பச்சையான திருட்டாகவே கருதுதற்குரியதாகும்.

**வஞ்சினவுரை**

நெஞ்சில் வீரப்பெருமிதமும் கண்களில் கோபமும் கொப்பளிக்கக் கூறும் வீறுரைகளே வஞ்சினவுரைகள் எனப்படும். அரசியல் விவகாரங்களில் பாதிக்கப்பட்டவர்கள் உரைக்கும் இந்த உறுதியுரைகளால் போரும் பூசலும் புது வேகம் பெறும். இத்தகைய உறுதியுரைகள் போர்த் தொடர்பான இலக்கியங்களில் இடம் பெற்றமைவது இயல்பு[23].

மார்த்தாண்ட வர்மாவால் வஸ்த்து வகைகளும் நிர்வாக உரிமைகளும் பறித்து அவமானிக்கப்பட்ட தம்பிமாரின் சில வஞ்சினவுரைகள் தம்பிமார் கதையில் இடம் பெறுதல் காணலாம்.

**மறுதுருவந் தனில் சென்று**
**மாறிப்படை கொண்டு வந்து**
**மாறிப்படை கொண்டு வந்து**
**மன்னவரை துரைத்தி வெட்டி**
**படை பொருதி வெற்றி கண்டு**
**பறித்த வகை எடுக்கவேணும்**[24]

என்பது தம்பிமாரின் வீறுணர்ச்சி மிகு வஞ்சினவுரையாகும். "பகை வேண்டாம், ஒத்துப் போவீராக" எனக் கூறிய நாட்டாரிடம்

மறுத்து, "மாறிப்படை கொண்டு வந்து மார்த்தாண்ட வர்மாவின் கோட்டையைக் கைவசமாக்கிடுவோம்" என்று உறுதியுரை உரைக்கின்ற காட்சியும் இடம் பெற்றுள்ளது. "மலங்க வேண்டாம் தாயாரே! மார்த்தாண்டனை மலைமேல் விரட்டிடுவேன். மலை நாட்டை அழித்துக் கோட்டையைப் பிடித்திடுவேன்" என்று தாயாரிடமும் வஞ்சினம் உரைப்பது காணலாம். இழப்பின் துயரத்திலும் அவமானத்தின் ஆட்சியாலும் தன்மானத்தின் தகைமையாலும் இத்தகைய வஞ்சினவுரைகள் எழுந்ததாகக் கருதலாம்.

**படை முகாம்**

நெடுந்தூரத்திலிருந்து வருகின்ற படைகள் தங்கிக் களைப்பைப் போக்கி இளைப்பாறவும், போர் உத்தி பற்றித் திட்டமிடவும், உளவு பார்க்கவும், பயிற்சியளிக்கவுமாகத் தற்காலிகமாகத் தங்குமிடமே பாசறை[25]. இதற்குக் கூடாரம், பாளையம், கட்டூர், முகாம், இருக்கை, தாவளம் ஆகிய பெயர்களும் உண்டு. போர்க்கதைப் பாடல்களில் படைகளின் இந்தத் தங்குமிடம் பற்றிய செய்திகள் இடம் பெறுவது இயல்பு.

தம்பிமார்கதைப் பாடலில் சில இடங்களில் அழகப்ப முதலியாரின் படைகள் முகாமிடுதல் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அப்படைகள் நெல்லையிலிருந்து புறப்பட்டு முதலில் கடுக்கரையில் பாளையமிடுகின்றன. அடுத்து திட்டுவிளையில் கூடாரம் அடிக்கின்றன. தொடர்ந்து வடசேரியில் தாவளமிடுகின்றன. இறுதியில் திருவிதாங்கோட்டில் முகாம் செய்வதாகச் சுட்டப்படுகிறது. மார்த்தாண்ட வர்மா சிதறிய தம் படைகளை மீண்டும் திரட்டி பத்மநாபபுரம் கோட்டைக்குள் பாளையம் கொள்ளச் செய்வதும் காணலாம். ஓய்வும் உறக்கமும் முன்னேற்பாடுகளின் தேவையும் கருதித் தம்பிமார் கதையில் படைமுகாம் அமைவது காணலாம்.

**முற்றுகை**

போர் மேற் செல்லும் வேற்றுப்படைகள் உள்நாட்டின் காவல் அரண், கோட்டை ஆகியவற்றைக் கைப்பற்றிச் சூழ்ந்து கொளல் முற்றுகை எனப்படும்[26]. போரிலக்கியங்களில் இந்த முற்றுகை

சித்திரிக்கப்படுவது இயல்பு. தம்பிமார் கதைப்பாடலில் ஒரே ஒரு முற்றுகை மட்டும் இடம் பெறுவதைக் காணலாம். முதலியாரின் படைகளும் தம்பிமாரின் படைகளும் இணைந்து தாக்க, மாடம்பிமார்களும் பிள்ளைமாரும் படைகளுடன் பின் வாங்க, மார்த்தாண்ட வர்மா தோற்றுப் புறமுதுகு காட்டி கோட்டைக்குள் ஓடி ஒழிகிறார். இச்சூழ்நிலையைச் சரியாகப் பயன்படுத்தும் நோக்கில் எதிர்ப்படைகள் கோட்டையைச் சுற்றி வளைத்து முற்றுகையிடத் தொடங்குகின்றன. எதிர்ப்படையின் ஆற்றலையும் அதிரடி நடவடிக்கையையும் சுட்டியமைவது இத்தகைய முற்றுகை எனலாம்.

## போர்

போரிலக்கியங்களின் முக்கியக் கதைச் செயல்பாடுகள், போர் செய்தல் பற்றியனவாகும். போர் வருணனைகளும் விளக்கங்களும் வீரக்கதைப் பாடல்களில் மிகுந்தமையும்.[27] தம்பிமார் கதையில் போர்த் தொடர்பான பல செய்திகளும் விளக்கங்களும் இடம்பெற்றமைவது காணலாம். போரில் குதிரை, யானை, காலாள், பீரங்கிப் படைகள் பங்கு பெறுவதாகக் காட்டப்படுகின்றன. வாள், பரிசை, பருவட்டம், பிச்சாத்தி ஆகியவை ஆயுதங்களாகப் பயன்படுத்தப் படுகின்றன. ஆயுதப்போர் தவிர மற்போரும் இடம் பெறுகின்றது. வர்மம், சிலம்பம் ஆகிய களரி முறைகளும் காட்டப்படுகின்றன.

**காலோடு கைகளறவே**
**கண்ணோடு மூக்கும் அற**
**மூக்கும் முகமும் சென்னியும் அறவே**
**முதுகினிலே வெட்டுப்பட**
**வெட்டவே தட்ட மீதிலே**
**எழும்பி விரவுடன் சாடுவாராம்**
**சாடவே முதுகினில் அணியது முடுகி**
**தானவர் வெட்டுவாராம்[28]**

வர்மாவின் படைகளுக்கெதிராகத் தம்பிமார் வெந் திறலாற்றலுடன் விளைவிக்கும் வெம்போர் பற்றிய வீரக் காட்சியிது.

நாகர்கோவில் கொட்டாரத்தில் வைத்து மன்னரால் உடைவாள் பறிக்கப்பட்டும் வலிய தம்பி மற்போராற்றினார்.

மல்லுக் கெட்டிப் பிடிக்க வலிய தம்பியும்
வற்ணத் தட்டு தட்டி தொட்டு மடக்கினார்
பொன்னாங் குருவிகள் பாய்ந்தது போல
பொறித் தட்டு தட்டியும் மடக்கினாரே[29]

இது வலியத்தம்பியின் மற்போர் பற்றிய உவமை பெறு வரிகளாகும். குஞ்சு தம்பியும் நிராயுத பாணியாக நின்று மற்போராற்றிய காட்சியும் இடம் பெறுகிறது.

மல்ப்போரும் வற்ணத் தட்டுகளும்
வாய்த்த பொறி தட்டு தட்டி மடக்கினார்
நாலாறு நாளிகையாகவே
நன்றியுடன் போராடி தட்டினார்[30]

முக்கிய கதைச் செயலாதலின் இவ்வாறானப் போர் காட்சிகள் வருணனை விளக்கங்களாக அமைகின்றன எனலாம்.

**களநிலை**

போருக்குப் பின் அமைந்த போர்க்கள நிலையை வீர இலக்கியங்கள் எடுத்துக் காட்டுவது இயல்பு. தம்பிமார் கதையிலும் போர் பின் களக் காட்சியொன்று உவமை நயத்துடன் எடுத்துக்காட்டப்படுவது காணலாம்.

ஆடறுந்த களம் போல்
அதில் பட்ட வுதிரமுமாய்
கோவிக்கல் வாசல்களும்
கொட்டார வீதிகளும்
உதிரக் களமாய் ஓடுதல்லோ
உற்ற ஆறதுபோல்.[31]

நிராயுதபாணியாக நின்ற வலியதம்பியை மன்னர் மார்த்தாண்ட வர்மாவின் காவலர்கள் சிறைப்பிடித்து நல்க, அவர் குரல்வளையைக் கடாரியால் அறுக்க அமைந்த களநிலைக்

காட்சி இது. இதே களத்தில் இதே அமைப்பில் நடந்த குஞ்சு தம்பியின் படுகொலையிலும் இதே காட்சியே எடுத்துக் காட்டப்படுகிறது. போரின் கொடூரத்தன்மையை விளக்கும் நோக்கில் அமைவது களநிலைக் காட்சி எனலாம்.

**சிறைப் பிடித்தல்**

போர்களில் எதிர்ப் படை வீரர்களைச் சிறைப்பிடித்தல் என்பது பொதுவான வழக்கமாகும். இது போர்க்கதைப் பாடல்களில் இடம் பெறும் வீரக் கூறாகும். தம்பிமார் கதையிலும் சிறைப்பிடித்தலுக்கு ஒப்பான இரு காட்சிகள் இடம் பெற்றமைவது காணலாம். முகம் காட்ட வந்த வலிய தம்பியிடம் நயமாக வாளைப் பிடுங்கிய மார்த்தாண்டவர்மா சுசீந்திரம் கோயில் கொள்ளை தொடர்பாக வாதத்தைத் தொடங்கிப் பிரச்சினையை உருவாக்கிக் காவலர்களால் வரிந்து கட்டிச் சிறைப் பிடிக்கிறார். அதே அமைப்பில் குஞ்சு தம்பியின் சிறைப்பிடிப்பும் அமைகிறது. நிராயுத பாணியாக நின்ற தம்பிமார்களை காவலர்களால் வரிந்து கட்டிச் சிறைப்பிடித்தல் நீதியற்றது என்பதைக் கற்பார் உணருமாறு இச்சித்திரிப்பு அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**வென்றி**

போரின் இறுதியில் நிகழும் விளைவே வென்றி ஆகும். போரிடுபவரில் ஒரு படை வெல்வது உறுதி. இந்த வென்றி, சில வடிவங்களில் வெளிப்படையாகவும் சில வடிவங்களில் குறிப்பாகவும் காட்டப்படுவதுண்டு. வீரயிலக்கியங்களில் வென்றி சிறப்பித்துரைக்கப்படுவது இயல்பு. தம்பிமார் கதையில் வென்றி குறிப்பால் மட்டும் உணர்த்தப்படுகின்ற நிலை காணப்படுகிறது. தம்பிமார், முதலியார் படைகளின் கூட்டுத் தாக்குதலாலும், சூழ்ச்சியுடன் பிள்ளைமாரும் மாடம்பிமாரும் பின்வாங்கியதாலும் திணறிப்போன வர்மாவின் படைகள் தளர்ந்து புறமுதுகு காட்ட வர்மாவும் கொட்டாரத்திற்குள் ஓடி மறைகிறார். இச் செயல்பாடுகள் தம்பிமாரின் வெற்றியை உணர்த்துவதாகும்.

நாகர்கோவில் கொட்டாரத்தில் முகம் காண்பித்தல் எனும் பேரில் தம்பிமாரை வருவித்து அவர்களின் வாட்களைக் கையகப்படுத்தி நிராயுதப்பாணியாக நின்றவர்களை, காவலர்களை ஏவி வரிந்து கட்டிச் சிறைப்பிடித்து, படு கொலை செய்து வெற்றியை ஈட்டுகிறார் மன்னர் மார்த்தாண்ட வர்மா. இந்த வெற்றி அநியாயமாகப் பெற்றது. வஞ்சகச் சூழ்ச்சியால் பெறப்பட்டது. போர் அறம் மீறப் பெற்றது. ஆதலின் உண்மையில் வென்றவர் தம்பியரே என்பது தகும்.

**முடிவுரை**

தம்பிமார் கதை ஒரே சமயம் ஒரு நாட்டுப்புறக் கதைப் பாடலாகவும் போர்க் கதைப்பாடலாகவும் அமைவதால் இந்த இரண்டு இலக்கியத்தின் கூறுகளும் இதில் இடம் பெற்றுள்ளன. நாட்டுப்புறயியல் கூறுகள் பெரும்பாலும் சமுதாயப் பின்புலத்திலமைந்த பண்பாட்டுக் கூறுகளாக அமைவது பதிவு செய்யப்படுகின்றது. வாழ்வியல் சடங்குகள் உள்ளடங்கிய பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவை இதில் அடங்குவதும் கூறப்படுகின்றன.

பிறப்பு தொடர்பான சடங்குகள், கதை மாந்தர் பண்பு நலன் தொடர்பாக அமைகின்றன. தாலாட்டுப் பற்றிய செய்திகள் மூல முதல் நாட்டுப்புறச் செல்வாக்கினைச் சுட்டியமைவதாகும். திருமணம் பற்றிய சித்திரிப்புகள் கதைப்பாடலின் முக்கிய கதைக் கருவினை உணர்த்துவனவாகும். இறப்பும் ஒப்பாரியும் கதைப் போக்கிலமையும் துன்பியல் பின்புலத்தை வெளிப்படுத்துவன வாகக் கொள்ளலாம். பழமொழிகள், பாமர மக்களின் பண்பாட்டுச் செல்வம் என்பதை எடுத்துக் காட்டுவனவாகும். கல்வி கற்பித்தல் கதை மாந்தரின் பண்பு நலன் திறத்தினை வெளிக்காட்டி அமைவனவாகும்.

பாதம் பணிதலும் விடைபெறலும் பாசம், மரியாதை நிமித்தம் திகழும் சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளாக அறியப்படுவனவாகும். உலா வருதல் அரசியல் சமூகப் பண்பாட்டோடு தொடர்புடைய கூறாக எடுத்துரைக்கப்படுவது எனலாம். முகம் காட்டுதல் பண்டைய அரசியல் சமூக

வழக்காற்றின் எச்சமாக அமைவது காணலாம். குரவையிடுதல் பண்பாட்டில் ஊறிய ஒரு நாட்டுப்புற சமூகக் கூறாகக் கருதத் தக்கது. ஆடையணிகலன் பூணுதல் அரச மரபின் சமூகப் பண்பாட்டுத் தாக்கத்தினைச் சுட்டியமைவதும் எடுத்துரைக்கப் படுகிறது.

நம்பிக்கைகள், சமூகம், சமயம் தொடர்பான அச்சம் நீங்கி மகிழ்ச்சியும் வளர்ச்சியும் பெறுவதற்காகப் பாரம்பரிய நோக்கில் நிகழ்த்தப்படுவனவாகும். சகுனம், சோதிடம் பார்த்தல் வருமுன் காக்கும் உளவியல் நோக்கில் நிகழ்த்தப்படுவன என்பதும் கூறப்படுகிறது. விதி பற்றிய நம்பிக்கை கட்டுக்கடங்கா நிகழ்வுகளை வாழ்வோடு தொடர்பு படுத்திக் காண்பதற்கும் அமைதி கொள்வதற்கும் உரியதாகும் என்பதும் அடையாளப் படுத்தப்படுகிறது.

சத்தியம் செய்தல் சமய சமூக மரபின் பாற்பட்டது மட்டுமின்றிக் கதை மாந்தர் பண்பு நலன் ஆய்விற்கும் வழிவகுப்பதாகும். மீமானிட நிகழ்வுகள் விந்தைக்கும் வியப்பிற்கும் வழங்கப்படும் கற்பனைத் தீனிகளாக மட்டுமின்றிச் சமயவுணர்வு ஊக்கிகளாக அமைவதும் எடுத்துக்காட்டப் படுகிறது. தெய்வ மாக்கல் நிகழ்வுகள் ஒருவர் செய்த பாபத்திற்குப் பலர் வழங்கும் பரிகாரமாக அமைவதும் கண்டறியப்படுகிறது. இவ்வழிபாடு சமுதாயம் பாபமுக்தி பெறுவதற்கான ஓர் ஆன்மிக உத்தியாகக் கருதத் தக்கதாகும்.

தம்பிமார் கதை மாந்தர்கள் வெந்திறல் வீரமும் தீரமும் பெருமிதமும் உடையவர்களாதலின் அவர்கள் குண நலன்களோடு தொடர்புற்றுப் பல வீரயியல் கூறுகளும் நூலில் தாக்கம் பெற்றுள்ளது அடையாளங் காணப்படுகின்றன. படையுதவி பெறப் படைத்தூது நேரடியாகவும் தூதர்வழியும் அமைவது சுட்டப்படுகிறது. பல்வேறு வகை இனப் படையினரை அறிமுகப் படுத்த படையணி பயன்படுமாறும் எடுத்துக் காட்டப்படுகிறது. படைப்பயணம் பற்றிய விரிவான விளக்கங்கள் வரலாற்றின் தாக்கத்தினை மட்டுமின்றிக் கதை நீட்சியினையும் கருத்தில் கொண்டமைவன எனலாம். சூறையாடுதல் என்பது

போர் நெறியின் மறைவில் நிகழ்த்தப்படும் கொள்ளையும் திருட்டும் பேராசையை நிரப்பும் அக்கிரமச் செயலுமாகும் என்பதும் ஆய்ந்து பதிவு செய்யப்படுகிறது.

பாதிக்கப்பட்ட, அவமானமுற்ற நெஞ்சின் வீறுணர்ச்சியில் இன்னது செய்வேன் எனும் உறுதியுரையே வஞ்சினவுரையாக வெளிப்பட்டமைவது எடுத்துக்காட்டப்படுகிறது. படைமுகாம் கட்டுதல் இளைப்பாறவும் களைப்பாறவும் தயாரெடுக்கவும் மட்டுமின்றி எதிரணியினருக்கு உணர்த்தவுமாகும் என்பது உரைக்கப்படுகிறது. முற்றுகை என்பது எதிரியைத் தளர்த்திப் பணிய வைக்கவும், படைபலத்தை உணர்த்தவுமாக அமைவதும் எடுத்துக் காட்டப்படுகிறது. வீரக்கதை மாந்தர்களின் போராற்றலையும் உடலாற்றலையும் விதந்து போற்றும் பாங்கில், உரைக்கும் நோக்கில் போர்ச் செயல்பாடுகள் வருணிக்கப் படுகின்றன என்பதும் அடையாளங் காணப்படுகிறது.

போரில் பீரங்கியும் வெடிக்குண்டுகளும் பயன்படுத்தப் படுவதாக வரும் குறிப்புகள், வில்லுப்பாட்டின் பிற்காலப் பிறப்பையும் நவீன அறிவியல் தொழில் நுட்பத்தையும் சுட்டியமைவதாகும். களரி, வர்மம், சிலம்பம் முறைகள் கலந்த மற்போர் பற்றிய செய்திகள் குமரி மாவட்ட பின்புலத்தைச் சுட்டியமைவதாகும். போரின் கொடூரத்தை உணர்த்தும் நோக்கில் களநிலை காட்சியாக்கப்படுவதும் எடுத்துரைக்கப் படுகிறது. தம்பிமாரின் வெற்றி தந்திரமாகத் தடுக்கப்பட, தம்பிமார் மீது வெற்றி கொள்ள வர்மா வஞ்சகமும் சதியும் பயன்படுத்துவதும் சுட்டிக்காட்டப்படுகிறது.

## குறிப்புகள்

1. கேசவன். கோ, கதைப்பாடல்களும் சமூகமும், ப. 35
2. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், நாட்டுப்புறத் தமிழியல், ப. 102
3. Arunachalam. M, Ballad Poetry, p 20
4. லூர்து. தே, நாட்டார் வழக்காறுகள், ப. 122

5. த.மா.க. வரி. 145-146
6. மேலது, வரி. 102 - 103
7. லூர்து. தே, முன்னது, ப. 132
8. த.மா.க, வரி. 194-196
9. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது ப. 101
10. த.மா.க. வரி. 1715 - 1719
11. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது, ப. 100
12. லூர்து. தே, முன்னது, ப. 137- 139
13. த.மா.க, வரி. 352 - 355
14. மேலது, வரி. 493 - 495
15. மேலது, வரி. 764 - 765
16. Arunachalam. M, Ballad Poetry, p. 31
17. த.மா.க, வரி. 1727 - 1728
18. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது ப. 11
19. மேலவர், முஸ்லிம் தமிழ் வீரக்கவிதை ஓராய்வு; ப. 312
20. த.மா.க, வரி. 1041 - 1042
21. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது ப. 316
22. த.மா.க, வரி. 1041 - 1042
23. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது ப. 322
24. த.மா.க, வரி. 901 - 903
25. மீரான் பிள்ளை எம்.எம். திருமலர், முன்னது ப. 320
26. மேலவர், மேலது, ப. 321
27. மேலவர், மேலது, ப. 330
28. த.மா.க, வரி. 1204 - 1207
29. மேலது, வரி. 1546 - 1548
30. மேலது, வரி. 1649 - 1651
31. மேலது, வரி. 1606 - 1608

## இயல் - ஆறு

# தம்பிமார் கதைப்பாடலும் திருவிதாங்கூர் வரலாறும்

### முன்னுரை

தம்பிமார் கதை, திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தைக் கி.பி. 1729-1758 காலகட்டத்தில் ஆட்சி செய்த மன்னர் அனிழம் திருநாள் மார்த்தாண்ட வர்மாவின் வரலாற்றோடு தொடர்பு டையதாகும். இதன் நேர் இணை வடிவமாக மலையாளத்தில் வழங்கப்படும் தெக்கன் பாட்டு, வலிய தம்பி குஞ்சு தம்பி கதை. தம்பிமார் கதையோடு தொடர்புடைய மற்றொரு கதைப்பாடலும் 'ஒட்டன் கதை' என்ற பெயரில் வழங்கப்படுவது காணலாம். ஆனால் இக்கதைப்பாடல் தம்பிமார் கதைப் போலன்றி, தம்பிமாரை எதிர்மாந்தராகச் சித்திரிப்பது குறிப்பிடத்தக்கது.

சி.வி. இராமன் பிள்ளை எழுதிய மார்த்தாண்ட வர்மா, எம். கிருஷ்ணகுமார் எழுதிய திருவிதாங்கூரின் ராஜசிம்கம் ஆகியவை மார்த்தாண்டவர்மா பற்றி மலையாளத்தில் எழுந்த நாவல்களாகும். மார்த்தாண்ட மகாத்மியம் எனும் காவியமும் மலையாளத்தில் உள்ளதாகத் தெரிகிறது. தம்பிமாரின் தங்கை கொச்சு மாடம்மை பற்றி மலையாளத்தில் 'உம்மிணித்தங்க' எனும் புகழ்பெற்ற ஒரு நாடகமும் வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

### கேரள வரலாற்று நூல்கள்

மன்னர் மார்த்தாண்ட வர்மா, தம்பிமார் வரலாற்றினை அறிந்துகொள்ள சில முக்கியமான வரலாற்று நூல்கள் துணை புரிகின்றன. டி.கே. வேலுப்பிள்ளை, நாகமய்யர் ஆகியவர்கள்

எழுதிய திருவிதாங்கூர் ஸ்ட்டேட் மானுவல்கள், பி. சங்குண்ணி மேனான் எழுதிய திருவிதாங்கூர் சரித்திரம் (மலை), கே.பி. பத்மநாபமேனோன் எழுதிய ஹிஸ்ட்ரி ஆஃப் கேரளா, ஏ. ஸ்ரீதர மேனோனின் கேரள சரித்ரம் (மலை), ஏ.பி. இபுறாகீம் குஞ்ஞி எழுதிய மார்த்தாண்டவர்மா (மலை), கே. சிவசங்கரன் நாயரின் வேணாட்டின்றெ பரிணாமம் (மலை) ஆகிய நூல்கள் குறிப்பிடத் தக்கனவாகும். எனினும் இந்நூல்களிலும் திருவிதாங்கூர் வரலாறு பற்றிச் சில கருத்து வேறுபாடுகள் நிலவுவதை அறியலாம். இவை தரும் செய்திகளைத் தம்பிமார் கதைப்பாடல் காட்டும் வரலாற்றுக் கூறுகளோடு ஒப்பிட்டுக் காண்பது வரலாற்று நழுவல்களையும் மாறுபாடுகளையும் கண்டறியத் துணை புரிவதாகும்.

### வரலாற்று விலகல்கள்

தம்பிமார் கதை ஒரு வாய்மொழி இலக்கியம். திருவிதாங் கூர் பகுதியில் வாழ்ந்த நாட்டுப்பற்றுள்ள சிலரால் வில்லுப் பாட்டாக எழுதப்பெற்ற நூல். சாதாரண மக்களுக்குச் சுவை பகர, கற்பனையும், வருணனையும் கலந்துருவாக்கப் பட்டது.

வரலாற்று நூல்களினடிப்படையில் எழுதப்பெற்றதல்ல. ஆதலின் வரலாற்றுத் தகவல்கள் தரும் நூல்களோடு ஒப்பிடும்போது முரண்பட்ட விளக்கங்களும் தகவல்களும் தம்பிமார் கதைப் பாடலில் காணமுடியும்.

வரலாற்று நூல்கள்கூட சில கருத்துகளில் மாறுபடுவதும் காண்பதற்குரியது. இவ்வாறு ஒப்பிட்டுக் கண்டறியப்பட்ட செய்திகள் தம்பிமார் வரலாறு. மார்த்தாண்டவர்மா வரலாறு, அழகப்ப முதலியார் வரலாறு, பிள்ளைமார் மாடம்பிமார் வரலாறு ஆகிய தலைப்புகளில் இங்குத் தரப்படுகின்றன.

### தம்பிமார் வரலாறு

திருவிதாங்கூர் மன்னர் இராமவர்மாவின் ஆட்சிக் காலத் தில் (கி.பி. 1721 - 1729) தொடங்கி, தம்பிமார் கதை கூறப் படுகிறது. இதில் இராமவர்மாவின் மக்களான தம்பிமார் வலிய தம்பி, குஞ்சு தம்பி எனக் குறிக்கப்படுகின்றனர். ஆனால்

வரலாற்றில் இப்பெயர் மாறுபட்டமைகிறது. வலிய தம்பியின் இயற்பெயர் பப்பு தம்பி என்றும் குஞ்சு தம்பியின் இயற்பெயர் ராமன் தம்பி என்றும் அமைகிறது[1]. மற்றொரு வரலாற்று நூல் தம்பிரான் ராமன் என்றும் தம்பி ராமன் ஆதிச்சன் என்றும் குறிப்பிடுவதைக் காணலாம்[2]. எனினும் வலிய தம்பி, குஞ்சு தம்பி எனும் பெயர்கள் இளைய மூத்த சகோதரர்களைச் சுட்டும் நோக்கில் அமைந்தது என்றும் இப்பெயர் வைப்பு முறை கேரள சமுதாயப் பண்பாட்டினைப் பின்பற்றியமைந்ததென்றும் அமைதி கொள்ளலாம்.

மன்னர் மார்த்தாண்ட வர்மாவுடன் தம்பிமார் முரண்பட்டுச் செயல்படுவதற்குக் காரணிகளாகப் பெண் மறுப்பு, வஸ்த்து நிர்வாக உரிமை பறித்தல் ஆகியவற்றைக் கதைப்பாடல் குறிப்பிடுகின்றது. அரசுரிமையிழப்பு உறுதியாகச் சுட்டப்படவில்லை. அழகப்ப முதலியார் தம்பிமாரை 'மன்னரே' என்று வரவேற்க, "நாங்கள் இப்போது மன்னரில்லை" என்று மட்டும் பதிலளிக்கின்றனர். ஆனால் வரலாற்று நூல்கள் அரசுரிமை மறுப்பும் இழப்புமே இந்த மறுதலிப்பிற்கான முக்கியக் காரணியாக குறிப்பிடுகின்றன[3].

உரிமை மறுப்பு மட்டுமன்றிப் பல்வேறு காரணங்களால் இந்தப் பூசலும் போராட்டமும் ஏற்பட்டதாக மற்றொரு நூல் சுட்டுகின்றது[4]. தம்பிமார் கூட்டத்தினர் பல இடங்களில் மார்த்தாண்ட வர்மாவைக் கொல்லத் திட்டம் தீட்டிச் செயல்பட்டதாக பி. சங்குண்ணி மேனோன்[5] கூறுவார். தம்பிமார் ஆட்சியுரிமை வேண்டி போராட்டங்களில் ஈடுபட்டதாகச் சில வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவது தம்பிமாரை அநியாயமாக மன்னர் கொலை செய்ததற்கான காரணம் தேடும் கட்டுக்கதை என்பார் ஏ.பி. இபுறாகீம் குஞ்ஞி[6]. எவ்வாறாயினும் தம்பிமார் மன்னருக்கெதிராகச் செயல்பட முக்கியக் காரணம் அரசுரிமை இழப்பே என்றும் அதைத் தொடர்ந்து முரண்பாடு உறுதிப்படுவதற்கான காரணிகளே பெண் மறுப்பும் வஸ்த்து வகை, நிர்வாக உரிமைப் பறிப்பும் எனத் துணியலாம்.

## மார்த்தாண்ட வர்மா வரலாறு

ஆற்றிங்கல் மகாராணியிடமிருந்து தத்தெடுக்கப்பட்ட மார்த்தாண்டவர்மா, மாமா இராமவர்மா இறப்பெய்த, மருமக்கட்

தாய முறைப்படி அரசுரிமைப் பெறுகிறார். தனக்கு எதிராகப் பல்வேறு சதித் திட்டங்களில் தம்பிமார் ஈடுபட்டதால் தொலைத்துக் கட்டத் திட்டம் தீட்டுகிறார். தம்பிமார் கதைப் பாடல் கூற்றுவழி இவர் தம்பிமாரை நாகர்கோவில் கொட் டாரத்தில் முகம் காண்பித்தல் பெயரில் அழைத்து பலவந்தமாகக் கொலை செய்கிறார். பின்புலம், கொலை முறை பற்றிக் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. வரலாற்றாசிரியர் களான பி. சங்குண்ணி மேனோனும் கே. சுகுமாறனும் தம்பிமார் கதைப்பாடல் கருத்தையே சுட்டிச் செல்கின்றனர்[7].

மன்னர் நாகர்கோவில் கொட்டாரத்தில் தங்கியிருக்கும் போது திருவிதாங்கூர் படைகள் தம்பிமாரை கைது செய்து மன் னரிடம் செய்தியறிவிக்க, உடனே கொலை செய்யுமாறு கட்டளை யிட்டதாக ஏ. ஸ்ரீதரமேனோன் கூறுகிறார்[8]. மன்னரின் காவல் தளபதி கண்ணனூர் அனந்தன் நாடாருடன் ஏற்பட்ட மோதலில் பஞ்சவன்காடு எனுமிடத்தில் தம்பிமார் வீழ்ச்சி யடைய, மன்னர் கொலை செய்யுமாறு கட்டளை இட்டதாக ஒட்டன் கதை குறிப்பிடுகிறது[9]. எவ்வாறாயினும் தம்பிமார் கொலைக்கு மன்னர் மார்த்தாண்ட வர்மாவே காரணம் என்பதில் சிறிதும் ஐயமில்லை எனலாம்.

மார்த்தாண்ட வர்மாவின் மாமா இராமவர்மா கி.பி. 1726இல் உள்நாட்டு கலகக்காரர்களான தம்பிமார், பிள்ளைமார், மாடம்பிமார், யோகக்காரர்கள் ஆகியவர்களை அடக்குவ தற்காக, திருச்சிக்குச் சென்று மதுரை நாயக்க மன்னரின் உதவியை நாடியதாகத் தெரிகிறது[10]. கி.பி. 1727இல் மார்த் தாண்ட வர்மா மதுரைப் படையினை அடக்க, திருச்சியில் சென்று நாயக்கரின் உதவியைத் தேடியதாகவும் அறிய முடிகிறது[11]. இந்தத் தகவல்கள் தம்பிமார் கதையில் இடம் பெறவில்லை என்பது எடுத்துரைக்கத்தக்கதாகும்.

தம்பிமார் கதையில் மார்த்தாண்ட வர்மாவின் மந்திரியாகக் கிருஷ்ணன் கேசவனும் தளவாயாகக் கொச்சு ரவி மார்த்தாண்ட பிள்ளையும் சுட்டப்படுகின்றனர். ஆனால், வரலாற்றில் மந்திரி மாராக இளம்பெயில்பண்டால், இடத்தறைப் போற்றி ஆகியோர்

குறிப்பிடப்படுகின்றனர். கொச்சுரவி மார்த்தாண்டபிள்ளை பாது காவலராகக் காட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. வில்லுப் பாட்டாகப் பாடப்படும் கதைப்பாடலாகத் தம்பிமார் கதை அமைவ தால் பாமரப் பாடகர்கள், செவிவழி பெற்ற செய்திகள் வழி இக் கதைப் பாடலை இயற்றியிருக்கலாம் என எண்ணத் தோன்று கிறது. அதன் காரணமாக ஏற்பட்டதே இந்த வரலாற்று நழுவல்கள் எனலாம்.

## அழகப்ப முதலியார் வரலாறு

தம்பிமார் கதைப்பாடலில் அழகப்ப முதலியார் திருநெல் வேலியில் ஆட்சி செய்யும் குறுநில மன்னராகக் காட்டப்படுகிறார். நாஞ்சில் நாட்டு விளை பொருட்களை, சுசீந்திரம் கோயிலைக் கொள்ளையிடுபவராகவும் காரியச் சித்திக்காகக் கையூட்டு வாங்குபவராகவும் காட்டப்படுகின்றார். ஆனால் வரலாற்றில் இவர் பற்றிச் சில முரண்பாடான தகவல்கள் தரப்படுகின்றன.

நாயர் மாடம்பிமாரும் நம்பூதிரிப் பிள்ளைமாரும் யோகக் காரப் போற்றிகளும் சேர்ந்து குஞ்சு தம்பியை கி.பி. 1730இல் திருச்சியிலுள்ள பாண்டிய ஆளுநரைக் கண்டு மார்த்தாண்ட வர்மாவுக்கு எதிராகப் படையுதவி கேட்க அனுப்பியதாகவும் ஆளுநர் மதுரையிலுள்ள அழகப்ப முதலியாரைப் படையுடன் செல்லப் பணித்ததாகவும் பி. சங்குண்ணிமேனோன் குறிப்பிடுகிறார்[12].

அழகப்ப முதலியார் மதுரை நாயக்கரின் படைத்தளபதி என்றும் இவர் பெரும் படையுடன் திருவிதாங்கூர் வந்தடைய, மன்னர் பெரும் பொன்னும் பணமும் பொருளும் வழங்கி முதலியாரை திருப்பி அனுப்பியதாகவும் ஏ. ஸ்ரீதரமேனோன் கூறுகிறார்[13].

தங்களுக்குரிய ஆட்சியுரிமையை அநியாயமாக மார்த்தாண்டவர்மா பறித்ததாகத் தம்பிமார் முதலியாரிடம் சென்று முறையிட்டு உதவி வேண்ட, பெரும்படையுடன் இங்கு வந்து, தாயமுறைப்படி அரசுரிமை பெற்றதில் அநியாயமல்ல என்பதையறிந்து, மன்னருடன் ஒத்துப்போகுமாறு அறிவுரைத்துத் திரும்பிப் போனதாகவும் தெரிய வருகிறது.

அழகப்ப முதலியாரின் படைகள் கடியப்பட்டினம், தேங்காய்ப்பட்டினம் ஆகிய ஊர்களில் பெருங்கொள்ளை நடத்தியதாக கெ. சிவசங்கரன் நாயர் குறிப்பிடுகிறார்[14]. கதைப் பாடல்களில் இவ்வூர்களில் நடந்த சூறையாடல்கள் குறிப்பிடப் பெறவில்லை. அழகப்ப முதலி நெல்லை மன்னரா, பாண்டியப் படைத் தளபதியா அல்லது நாயக்கப் படைத்தளபதியா என்பதில் ஐயமே தவிர அவர் திருவிதாங்கூரில் படையெடுத்து வந்து கொள்ளை யிட்டதில் எவருக்கும் கருத்து வேறுபாடு கிடையாது எனலாம்.

## பிள்ளைமார் மாடம்பிமார் வரலாறு

தம்பிமார் கதைப் பாடலில் வரலாற்றிலிருந்து முற்றிலுமாக மாறுபட்டுப் பிள்ளைமார், மாடம்பிமார் காட்டப்படுகின்றனர். வரலாற்றில் எட்டு வீடு என்பது எண்ணிக்கையாக அமைய கதைப் பாடலில் பதினாறு வீடு எனச் சுட்டப்படுகிறது.

கழக்கூட்டத்துப் பிள்ளை, மகிடசேரி கொச்சு பிள்ளை, வெள்ள நாட்டு வீரபாகுப் பிள்ளை, நெடுமங்காடு நீலகண்டப் பிள்ளை, ஆரிய நாடு அனந்த பத்மநாப பிள்ளை என்பது கதைப்பாடல் குறிப்பு[15].

ஆனால் வரலாற்றில் இராமனா மடம், மார்த்தாண்ட மடம், குளப்புறம், கழக்கூட்டம், செம்பழஞ்ஞி, பள்ளிச்சல், குடமண், வெங்கானூர் பிள்ளைகளே குறிப்பிடப்படுகின்றனர்[16]. மட்டுமின்றி பிள்ளைமாரும் மாடம்பிமாரும் மன்னருக்கு ஆதரவாக படைதிரட்டுவதாகவும் மாடம்பிமார் மன்னருக்கு ஆதரவாகப் போரிடுபவராகவும் கதைப்பாடலில் குறிப்பிடப்பட வரலாற்றிலோ இவர்கள் தம்பிமாருடன் இணைந்து மார்த்தாண்ட வர்மாவுக்கு எதிராகச் சதித்திட்டம் தீட்டுபவராகவும் கலகம் விளைவிப்பவருமாகவே சித்திரிக்கப் படுவது காணலாம்[17].

பிள்ளைமார், மாடம்பிமார், யோகக்காரர்கள் ஆகியவர்களின் கைகளிலிருந்து தப்புவதற்காக இளைஞரான மார்த்தாண்டவர்மா தென் திருவிதாங்கூரைச் சார்ந்த குமரி மாவட்டத்தின் பகுதிகளில் மாறுவேடத்தில் அலைந்ததாகவும் பொத்தையடி தாணுமாலயரும், கண்ணனூர் அனந்தன் நாடாரும்

கூட்டமும் மன்னரை பல ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றிய தாகவும் செய்திகள் உள்ளன[18].

ஒரு தடவை மாடம்பி, பிள்ளைக் கூட்டத்தார் வர்மாவை துரத்தி வர அவர் பூவாறு எனும் ஊரில் ஒரு முஸ்லிமுடைய வீட்டில் ஓடிச் செல்ல, அங்கு இறைவழிபாட்டில் ஈடுபட்டு கொண் டிருந்த மூதாட்டி சூழ்நிலையைப் புரிந்து கொண்டு தமது பர்தா வுக்குள் மறைத்து வைத்ததாகவும் கூறப்படுகிறது. நெய்யாற் றின் கரையில் வைத்து இவர்களிடமிருந்து தப்ப ஒரு பலாமரப் பொந்தில் நுழைந்ததாகவும் தெரிகிறது. தாயைப் போல் காப் பாற்றியதால் இப்பலாமரம் 'அம்மைப் பலா' என அறியப்படுகிறது.

சுசீந்திரம் அருகில் மண்ணாலான ஒரு யானைச் சிலைக்குள் மறைந்தார். தக்கலையில் ஒரு கோவிலில் நுழைய, அங்குள்ள பூசாரி வர்மாவைக் காப்பாற்றத் தமது உடைகளை அவருக்குக் கொடுத்து, தாம் வர்மாவாக வேடமிட்டதாகவும் அதனால் உயிர் இழந்ததாகவும் அறிய முடிகிறது[19].

தம்பிமார் கதைப்பாடல் வட்டார மக்களின் மனப் போக்கில் தம்பிமாரை நேர்மாந்தராகக் காட்டுவதால் இந்த வரலாற்று நழு வல் ஏற்பட்டதாகக் கருதலாம். எனினும் தம்பிமாரின் ஆதரவாளர் களை மன்னரின் ஆதரவாளர்களாகச் சித்திரிக்கும் கதைப் பாடலின் போக்கு வரலாற்று முரண்பாடே என்பதில் ஐயமில்லை.

## முடிவுரை

தம்பிமார் கதைப்பாடல் ஒரு நாட்டுப்புற வில்லுப்பாட்டு அமைப்பிலுள்ள பாமரர் இலக்கியம். அக்காலத்தில் வழங்கப்பட்ட ஒரு நிகழ்வினை அடிப்படையாகக் கொண்டமைந்தது. அக்கால பாமரர்கள் தம்பிமாரை நேர்க் கதை மாந்தராகக் கண்டனர். அதனால் மன்னர் மார்த்தாண்ட வர்மா எதிர் மாந்தரானார்.

இந்தக் கதையை எழுதியவர்கள் உண்மை வரலாற்றைப் பெரிதும் அறிந்தவரல்லர். எனினும் தம்பிமார் உரிமை யிழந்தவராகவும், மாடம்பிமார் போரினிடையே பின்வாங்கும் சதிக்காரர்களாகவும் காட்டப்படுவதும் வரலாற்று நீதியாகக் கருதப்படுவதற்குரியதாகும்.

பிள்ளைமாரை மன்னரின் ஆதரவாளர்களாகக் காட்டியது மட்டுமே பெரும் முரண்பாடாக அமைகிறது. பிள்ளைமார், மாடம்பிமார் ஆகியோர் ஆட்சி நிர்வாகத்தில் உயர் பதவி பெற்றிருந்த காலத்திலேயே உட்பூசல் விவகாரங்களில் ஈடுபட்டதாக வரலாறுகள் கூறுவதால் அரசக் கூட்டத்தினராகக் காட்டியிருக்கலாம் என்று அமைதி கொள்ளலாம். கற்பனை கலந்த வரலாற்றுக் கதைப் பாடல் இலக்கியத்தில் வரலாற்றுக் கூறுகளை அடையாளம் காணமுடியுமே தவிர முழு வரலாற்றையும் கண்டறிய முடியாது என்பதே உண்மை.

## குறிப்புகள்

1. சுகுமாறன். கு, சேரர் வரலாறும் மக்கள் வாழ்வியலும், ப. 151
2. சிவசங்கரன் நாயர். கெ, வேணாடின்றெ பரிணாமம், (மலை) ப. 154
3. சுகுமாறன். கு, முன்னது, ப. 151
4. சிவசங்கரன் நாயர். கெ, முன்னது, ப. 154
5. சங்குண்ணி மேனோன். பி, திருவிதாங்கூர் சரித்ரம் (மலை) ப. 93
6. இபுறாகீம் குஞ்ஞி. ஏ.பி., மார்த்தாண்டவர்மா (மலை) ப. 26
7. சுகுமாறன். கெ, முன்னது, ப. 156
8. ஸ்ரீதரமேனோன். ஏ, கேரள சரித்ரம் (மலை), ப. 272
9. ஒட்டன் கதை, வரி. 209 - 222
10. சங்குண்ணி மேனோன். பி, முன்னது, ப. 89
11. சுகுமாறன். கெ, முன்னது, ப. 153
12. சங்குண்ணி மேனோன். பி, முன்னது, ப. 91
13. ஸ்ரீதரமேனோன். ஏ, முன்னது, ப. 91
14. சுகுமாறன். கெ, முன்னது, ப. 156
15. த.மா.க, வரி. 1154 - 1165
16. சுகுமாறன். கெ, முன்னது, ப. 148
17. இபுறாகீம் குஞ்ஞி. ஏ.பி. முன்னது, ப. 30
18. மேலவர், மேலது, பக். 24-25
19. மேலவர், மேலது, பக். 25-26

# இயல் - ஏழு

# ஆய்வு முடிவுகள்

## முன்னுரை

கேரள வரலாற்றுக் கதைப் பாடலான தம்பிமார் கதைப் பாடல் பற்றி விளக்க முறை, வரலாற்று முறை, ஒப்பாய்வு முறை போன்ற பல்வேறு கோணங்களில் செய்யப்பட்ட ஆய்வின் இறுதியில் பெறப்பட்ட மெய்மைகளும் முடிவுகளும் இயல் வாரியாகக் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

## கேரள வரலாற்று வீரப் போர்க்கதைப் பாடல்கள் - முடிவுகள்

நாகரிகம் தொடாத தொடக்கக் கால மக்களிடம் இயல்பாக எழுந்த கிராமிய இலக்கியமே நாட்டுப்புற இலக்கியம் என்பது சுட்டப்படுகின்றது. நாட்டு நகரத்திற்கு புறத்தே அமைந்த ஊர்களில், கிராமப்பகுதிகளில் வாய்மொழியளவில் வழங்கப் பட்டு வருவதால் இவை நாட்டுப்புற இலக்கியங்கள் எனப் பெயர் பெற்றன என்பதும் எடுத்துரைக்கப்படுகிறது. உழைக்கும் பாமர மக்கள் மாலை நேரத்தில் வேலையிலிருந்து திரும்பி ஓய்வெடுக்கும் வேளைகளில், மர நிழல்களிலும் வீட்டுத் திண்ணைகளிலும் ஊர் மன்றங்களிலும் பொழுது போக்கிற் காகக் கூடியிருந்து ஒருவர் இனிமையான குரலுடன் ஓசைமிகப் பாட, பலர் செவி மடுக்க, கதைப்பாடல் தோன்றலாயிற்று என்பது உணர்த்தப்படுகிறது. முற்காலத்தில் இத்தகைய கதைப் பாடல்கள் கதாகலாட்சேபம் போன்றும் பிற்காலத்தில் வில்லுப்

பாட்டுகளாகவும் அமைவது பாடிக்கேட்கும் இயல்பைச் சுட்டியமைவதாகக் கண்டறியப்படுகிறது.

தமிழ்க் கதைப்பாடல்கள் தெய்வ இதிகாச புராணம், சமூக குடும்பம் காதல், வரலாற்று வீரப்போர் எனும் முப்பெரும் தலைப்பில் அடங்குவனவாக அறிய முடிகிறது. இதில் வரலாற்றுப் போர்க்கதைப் பாடல்கள் கதை, அம்மானை, கும்மி, சிந்து, சண்டை, மாலை, படைப்போர், நாமா, கிஸ்ஸா ஆகிய வடிவங்களில் அமைவதும் ஆய்ந்தறிவிக்கப்படுகிறது. வரலாற்று வீரக்கதைப் பாடல்கள் பெரும்பாலும் அந்தந்தக் காலங்களில் நிகழ்ந்த அரசியல் பூசல்களையும் போராட்டங்களையும் கதைப் பொருளாகக் கொண்டு படைக்கப்படுவது எடுத்துரைக்கப் படுகிறது. இக்கதைப்பாடல்களில் அந்தந்தப் பகுதிகளில் வாழ்ந்த சாதனை வீரர்களே கதைத் தலைமை பெறுவதும் அடையாளங் காணப்படுகிறது.

கேரள வரலாற்று வீரப்போர்க் கதைப்பாடல்கள் தெக்கன் பாட்டுகள் என்ற பெயரில் தமிழிலும் மலையாளத்திலும் அமைந்து தென் கேரளத்தின் வரலாற்றைக் கதைப்பாடல்களில் தருவது ஆய்ந்தறியப்படுகின்றது. வடக்கன் பாட்டுகள், வீர மாப்பிளா படைப் பாட்டுகள் ஆகிய பெயர்களில் மலையாளத்தில் வீரக் கதைப் பாடல்கள் அமைவதும் எடுத்துக் காட்டப்படுகிறது. தமிழி லுள்ள கேரள வரலாற்றுக் கதைப் பாடல்கள் தெற்குக் கேரளப் பகுதியான திருவிதாங்கூரில் நிகழ்ந்த வரலாற்று நிகழ்வுகளின் அடிப்படையில் எழுந்துள்ளதும் கண்டறியப் படுகிறது. முக்கிய திருவிதாங்கூர் வரலாற்றுக் கதைப்பாடல்களான இரவிக்குட்டிப் பிள்ளை போர், வெங்கலராசன் கதை, திவான் வெற்றி ஆகியவற்றின் கதைத்திட்டம் அறிமுகப் படுத்தப்படுகிறது.

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தம்பிமார் கதை, கதைப்பாடலின் இணை வடிவமாக மலையாளத்தில் வலிய தம்பி குஞ்சு தம்பி கதை என்னும் கதைப்பாடல் ஏட்டுச் சுவடியாக உள்ளதும் கூறப்படுகிறது. இதன் கதைத்திட்டம் தம்பிமார் கதையை முழுமையாக ஒத்துப் போவதும், இது தம்பிமார் கதை யின் மாற்று வடிவமாக அமைவதும் ஆய்ந்து கூறப்படுகிறது.

தம்பிமார் கதையோடு மிகவும் நெருங்கியத் தொடர்புடைய ஒட்டன் கதை தமிழில் உள்ளதும் கதைத் திட்டத்துடன் உரைக்கப்படுகிறது. இக்கதைப்பாடல் சில நிகழ்வுகளிலும் கதை மாந்தர் அமைப்பிலும் தம்பிமார் கதையிலிருந்து விலகிச் செல்வதும் கண்டறியப் படுகிறது. வட்டார மக்களின் விருப்பத்திற்கேற்ப அந்தந்தக் கதைகள் அமைவதால் இந்த நழுவல்கள் ஏற்பட்டதாக முடிவு கூறப்படுகின்றது.

## வடிவ அமைப்பும் மொழி அமைப்பும் - முடிவுகள்

வடிவ அமைப்பும் மொழியமைப்பும் கதைப்பாடலின் கட்டமைப்பு முழுமை பெறத் துணை செய்கின்றன. நூல் தொடக்கத்தில் அமையும் காப்பு வணக்கமும் வாழ்த்தும் எழுதிய வரின், படிப்பவரின் சமயவுணர்வினோடு பாதிப்புகளின்றிப் பாடி முடிய அடைக்கலமும் பாதுகாப்பும் தேடும் மனப்பாங்கையும் காட்டுவனவாகும். நூற் பெயர் அமைப்பு கதைப்பாடலின் கருவை விளக்கும் குறிப்பையும் கதைத் தலைமையையும் சுட்டி நிற்பது காணத்தக்கது.

மார்த்தாண்ட வர்மாவால் கொலை செய்யப்பட்ட தம்பிமார்களும், ஏங்கியழுது தற்கொலை செய்த தாய், தங்கை, மாமன் ஆகியோர் கயிலாயம் சென்று மகாதேவர் அருள்பெற்று வழிபடுவதற்குரிய தெய்வங்களாக மாறிய நிலையை நூல் இறுதியில் குறிப்பிடப்பெறும் 'புதுக் கூட்டத்துவாதை' என்னும் பெயர் உணர்த்துவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

வாய்மொழியாகப் பலகாலம் பலராலும் பாடப்பெற்றும் எழுதப் பெற்றும் வரும் வில்லுப்பாட்டாதலின் ஆசிரியர் பெயர் அமையவில்லை எனத் துணியலாம். நூலின் இறுதியில் காலம் பற்றிய குறிப்புகளமைந்திருந்த வரி அழிந்து மாய்ந்து 'புதன் கிழமையன்று முடிந்தது' என்ற குறிப்பு மட்டும் எஞ்சிய நிலை நூலின் பழமையையும் ஆழமான வாய்மொழிப் பயன் பாட்டினையும் உணர்த்துவதாகும்.

பா அமைப்பில் அடிகளும் சீர்களும் சிதைந்தும் மருவியும் அமையும் நிலை நூலின் பழமையையும் தொடர் பயன்

பாட்டினையும் சுட்டியமைவதாகும். இறந்துபட்ட தம்பிமார் கூட்டத்தினர் கயிலாயத்தில் சென்று மகாதேவரை வணங்கி வாழ்த்தி வரம்பெற்ற நிலை இறுதி வாழ்த்துக்குப் பதிலியாக அமைந்ததாகலாம் என்பது கருத்து. பல்வேறிடங்களில் வந்து செல்லும் பயண ஊர்ப் பட்டியல் நூல் நீட்சிக்கு வழி வகுப்பதாகவும் கதையின் சரித்திர ஆதாரத்தைச் சுட்டுவதாக வும் அமைவது காணலாம்.

மலையாளச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், அடுக்குத் தொடர்கள், ஒலிக்குறிப்புச் சொற்கள் ஆகியவற்றின் பயன்பாடு தம்பிமார் கதைப்பாடலினை மலையாளப் பின்புலம் மிக்க ஒருபாட்டாகக் காட்டுவதாகும். பல்வேறிடங்களில் இடம்பெறும் அந்தாதி அமைப்பு கதைத் தொடர்ச்சியின் இணைப்புத் தொடர்பு நோக்கிலும் கதை அழுத்தத்தினையும் சுட்டியமைவதாகும்.

சொற்களும் தொடர்களும் திரும்ப வருதலும் அடுக்கி வருதலும் கதைக் கருத்து விளக்கம் கேட்போர் மனத்தில் பதியவும் ரசனை பெறவுமாக அமைந்தனவாகும். சில வரிகளின் தொடக்கத்தில் இடம்பெறும் உரைநிலைக் குறிப்புகள் கதையின் அடுத்தக் கட்ட இணைப்புத் தொடராக அமைவது காணலாம். கதை மாந்தரின் உரையாடல் அமைப்புகள் உணர்ச்சிபூர்வமான ஒரு நாடகக் காட்சியினைக் காட்டி நிற்பனவாகும்.

ஓசை ஒலிநய இயைபு அமைப்பு தம்பிமார் கதை வில்லுப்பாட்டாகப் பாடப்படும் போக்கினையும் கேட்போர் செவிக்கும் நெஞ்சுக்கும் இன்பம் பயக்கும் நோக்கினையும் உணர்த்தியமைவதாகக் கண்டறியப்படுகின்றது. பல்வேறு நிகழ்ச்சிகள் பற்றிய விளக்க வருணனைகள் கதை நீட்சிக்கு மட்டுமின்றி, சுவை பயப்பதற்குமாம் என்பதும் எடுத்துக்காட்டப் பெறுகிறது. இக்கதைப் பாடலில் ஆங்காங்கே அமையும் பல உவமைகள் கருத்துத் தெளிவைப் புலப்படுத்தவும் பாமரர் வாய்மொழிப் பண்பாட்டினைச் சுட்டவுமாகி நிற்கின்றன எனலாம். மொழியமைப்புக் கூறுகள் பல, நாட்டுப்புறயியல் கூறுகளாகவும் அமைபவை எடுத்துக்காட்டப்படுகின்றன.

**கதையும் கதை மாந்தரும் - முடிவுகள்**

தம்பிமார் கதை வில்லுப்பாட்டு வடிவத்தில் அமைவதால், முன்னிருப்பவர்கள் செவிமடுக்கும்படியாகக் கதை எடுத்துரைக்கப்படுவது காணலாம். இந்தக் கதைக் கூற்றுமுறை தற்சார்பின்மையைச் சுட்டியமைகிறது. மார்த்தாண்ட வர்மா பெண் கேட்க, தம்பிமார் திருமணம் மறுத்தலே கதைக்கருவாக நின்று கதைத் திட்டத்தை வளர்க்கிறது என்பது அறியப்படுகிறது. திருவிதாங்கூர் மன்னரின் சுசீந்திரம் யாத்திரையிலிருந்து கதை முறையாகத் தொடங்குகிறது. வர்மா, தம்பிமார் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் எழுந்த பூசலும் போராட்டமுமே கதைச் சிக்கலை ஏற்படுத்துவதும் கண்டறியப்படுகின்றது.

தம்பிமாரின் சொத்து, நிர்வாகம், நிதி உரிமைகளைப் பறித்தலும் பின்னலை உருவாக்கிக் கதையை நகர்த்திச் செல்வதும் சுட்டப்படுகிறது. இராமவர்மாவின் பள்ளி மெத்தையை வர்மாவுக்கு அளிக்கத் தடுத்து, குஞ்சு தம்பி கத்தியால் கிழித்தெறிவதும் தம்பிமாரைக் கண்முன்னால் நிற்காதீர் என மன்னர் விரட்டுவதும் கதைப் பின்னலுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதாக அறியப்படுகிறது.

தம்பிமார் மறுதுருவம் சென்று அழகப்ப முதலியாரிடம் படையுதவி கேட்பதும், முதலியாரின் படை நாஞ்சில் நாட்டு ஊர்களையும், கோவில்களையும் கொள்ளையிடுவதும், இரு படைகளும் எதிர்த்துப் போரிடுவதும் கதைவளர்ச்சிக்குக் காரணமாவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

போரில் வர்மா தோற்று புறமுதுகு காட்டிப் பத்மநாபபுரம் கொட்டாரத்திற்குள் மறைந்திருப்பதும் அங்கிருந்து தப்பிச் செல்வதும் அவரை வெட்ட குஞ்சுதம்பி முனைவதும் ஆகிய நிகழ்வுகள் கதையின் நிகழ்வில் நடக்கும் திருப்பங்களாக அடையாளம் காணப்படுகின்றன.

மன்னரை வாளால் ஓங்கி வெட்ட முயன்ற குஞ்சுதம்பியை முதலியார் தடுப்பதும், பெரும் பொருளை இலஞ்சமாகப் பெற்று இரு கூட்டத்தாரையும் கோவிலில் சத்தியம் செய்ய வைப்பதும்

கதைத்திட்டத்தின் திருப்பத்தின் உச்சநிலையைச் சுட்டுவதாகப் பதிவு செய்யப்படுகிறது.

தம்பிமாரைத் தந்திரமாக முகம் காட்ட அழைத்து நிராயுதபாணியான அவர்களை வரிந்து கட்டி மன்னர் கொலை செய்யும் செயல், கதை முடிவாக அமைவது எடுத்துரைக்கப் படுகிறது. தம்பிமாரின் பரிதாபகரமான இறப்பில் வருத்தமும் கவலையும் கொண்டு தாயார், தங்கை, மாமன் ஆகியோர் தற்கொலை செய்து கொள்வதும், இவர்கள் கயிலாய மலையில் மகாதேவர் அருள் பெற்று புதுக்கூட்டத்து வாதையாக, இசக்கியாக, நீலியாக வழிபடும் தெய்வங்களாக மாறுவதும் கதை விளைவாகச் சுட்டப்படுகிறது. கதைக்கரு, கதைத் தொடக்கம், கதைப்பின்னல், கதை வளர்ச்சி, கதைத் திருப்பம், கதைவிளைவு ஆகியவற்றின் அமைப்பே கதைத்திட்டமாக உருவாவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

தம்பிமார் கதையில் அமையும் நிகழ்வுகளின் நிலை, போக்கு, பொருள்களின் அடிப்படைகளில் கதைமாந்தர் அமைப்பு விளக்கப்படுகிறது. நேர்மாந்தர், எதிர்மாந்தர் எனும் பாகுபாட்டின் அடிப்படையில் நேர்த் தலைமை, நேர்த்துணைமை, நேர்க்குழு, எதிர்த்தலைமை, எதிர்த்துணைமை, எதிர்க்குழு மாந்தர் என்ற வகைமைப்பாடு சுட்டப்படுகிறது. நிகழ்வுகள், செயல்பாடுகள், குணநலன்கள் ஆகியவற்றின் அடிப்படையில் நேர்த்தலைமை மாந்தராகத் தம்பிமார் அடையாளங் காணப்படுகின்றனர். இவர்கள் உரிமைக்காகப் போராடுபவராகவும், தாழ்வு வந்தவிடத்துப் பதறாது துணிச்சலுடன் படையுதவி கேட்டுப் பயணம் செய்வதாக அமைவதும் விளக்கப்படுகிறது.

வாள்போரிலும் வாய்ப்போரிலும் மற்போரிலும் வல்லவராக அமைவதும் பதிவு செய்யப்படுகிறது. தாய், தங்கை, மாமனோடு பாசம் மிக்கவராகவும், சத்தியத்தைப் பேணுபவராகவும், மனித நேயம் மிக்கவராகவும் சித்திரிக்கப்படுவதும் எடுத்துக் காட்டப்படுகின்றது. எனினும் இவர்கள் பண்புநலன் அமைப்பில் பெரிய குறைபாடாக அமைவது முதலியாருக்கு நாஞ்சில் கோயில் கொள்ளைக்கு உரிமையளித்தது எனலாம். இறுதியில்

இவர்கள் வஞ்சகச் சூழ்ச்சியால் பரிதாபகரமான முறையில் கொல்லப்படுவது கதை கேட்போரிடம் பரிவை ஏற்படுத்துவதாக அமைவதும் கண்டறியப்படுகிறது.

பண்பு நலன் நோக்கில் நேர்த் துணைமை மாந்தராக அமைபவர்களில் இராமவர்மா, அழகப்ப முதலியார், அபிராமி, கொச்சுமணி மாடம்மை, கொச்சு மாறப்பப் பிள்ளை, இராமகிருட்டிணக் குருக்கள் ஆகியோர் பெருந்துணைமை மாந்தராகவும் ஏனையோர் சிறுதுணைமை மாந்தராகவும் அமைவது அடையாளங் காணப்படுகிறது.

இராமவர்மா பாசமும் பொறுப்பும் அழகியல் ஆர்வமும் உள்ளவராகவும் அழகப்ப முதலி பொருளாசையும், தந்திரமும் வீரமும் மிக்கவராகவும் காட்டப்படுவதும் கூறப்படுகிறது. அபிராமியும் கொச்சுமணி மாடம்மையும் அழகின், பாசத்தின் வடிவங்களாகவும் அவலச் சோகச் சித்திரங்களாகவும் அமைவதும் சுட்டப்படுகிறது. கொச்சுமாறப்பபிள்ளை பொறுப்புள்ள அண்ணனாகவும் பாசமுள்ள மாமனாகவும் அமைவது எடுத்துரைக்கப்படுகிறது. சிறுதுணை மாந்தரின், நேர்க்குழு மாந்தரின் செயல்பாடுகள் குறிப்பிடப்பெறும் அளவில் அமையாததும் கூறப்படுகிறது.

எதிர்மாந்தரில் எதிர்த்தலைமை மாந்தரின் பண்புநலன் விளக்கம் மட்டுமே சுட்டப்படுகிறது. எதிர்த்துணைமை மாந்தரின் செயற்பாடுகள் மிகக் குறைவாகவே அமைவதும் கூறப் படுகின்றது. பல்வேறு செயல்பாடுகளில் நோக்கில் மன்னர் மார்த்தாண்டவர்மா எதிர்த்தலைமை மாந்தராக அடையாளங் காணப்படுகிறார். இவர் வாக்குறுதியைக் காப்பாற்ற முடியாதவராகவும், பொய்ச் சத்தியம் செய்பவராகவும், சதித்துக் கொல்பவராகவும் காட்டப்படுவது ஆய்ந்தறியப் படுகின்றது. போரில் புறமுதுகு காட்டும் கோழையாகவும் பயந்து ஓடுபவராக வும் அமைவதும் விளக்கப்படுகிறது. முதலி யாருக்குக் கையூட்டளிப்பது இவரது சமயோசிதத்தையும் சந்தர்ப்ப வாதத்தையும் சுட்டியமைவதும் எடுத்துரைக்கப் படுகிறது. எதிர்க்குழு மாந்தர் கூட்டமாக வந்து எதிர்த்தலைமை மாந்தரின்

செயல்பாடுகளுக்குத் துணைபுரிபவராக அமைவதும் ஆய்ந்தறியப்படுகின்றது.

**நாட்டுப்புறயியல் வீரயியல் கூறுகள் - முடிவுகள்**

தம்பிமார் கதை ஒரே சமயம் ஒரு நாட்டுப்புறக் கதைப்பாடலாகவும் வீரச் சிற்றிலக்கியமாகவும் அமைவதால் இந்த இரண்டு இலக்கியத்தின் கூறுகளும் இதில் இடம் பெற்றுள்ளது காணலாம்.

நாட்டுப்புறயியல் கூறுகள் பெரும்பாலும் சமுதாயப் பின்புலத்திலமைந்த பண்பாட்டுக் கூறுகளாக அமைபவை பதிவு செய்யப்படுகின்றன. வாழ்வியல் சடங்குகள் உள்ளடங்கிய பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவை இதில் அடங்குவதும் கூறப்படுகின்றன.

பிறப்பு தொடர்பான சடங்குகள் கதை மாந்தர் பண்பு நலன் தொடர்பாக அமைகின்றன. தாலாட்டு பற்றிய செய்திகள் மூல முதல் நாட்டுப்புறச் செல்வாக்கினை சுட்டியமைவனவாகும். திருமணம் பற்றிய சித்திரிப்புகள் கதைப்பாடலின் முக்கிய கதைக் கருவினை உணர்த்துவனவாகும். இறப்பும் ஒப்பாரியும் கதைப் போக்கிலமையும் துன்பியல் பின்புலத்தை வெளிப்படுத்துவன வாகக் கொள்ளலாம். பழமொழிகள், பாமர மக்களின் பண்பாட்டுச் செல்வம் என்பதை எடுத்துக் காட்டுவனவாகும். கல்வி கற்பித்தல் கதை மாந்தரின் பண்பு நலன் திறத்தினை வெளிக் காட்டி அமைவதாகும்.

பாதம் பணிதலும் விடைபெறலும் பாசம், மரியாதை நிமித்தம் திகழும் சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளாக அறியப் படுவனவாகும். உலா வருதல் அரசியல் சமூகப் பண்பாட்டோடு தொடர்புடைய கூறாக எடுத்துரைக்கப்படுவன எனலாம். முகம் காட்டுதல் பண்டைய அரசியல் சமூக வழக்காற்றின் எச்சமாக அமைவது காணலாம். குரவையிடுதல் பண்பாட்டில் ஊறிய ஒரு நாட்டுப்புற சமூகக் கூறாகக் கருதத்தக்கது. ஆடையணிகலன் பூணுதல் அரச மரபின் சமூகப் பண்பாட்டுத் தாக்கத்தினைச் சுட்டியமைவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

நம்பிக்கைகள், சமூகம், சமயம் தொடர்பான அச்சம் நீங்கி மகிழ்ச்சியும் வளர்ச்சியும் பெறுவதற்காகப் பாரம்பரிய நோக்கில் நிகழ்த்தப்படுவனவாகும். சகுனம், சோதிடம் பார்த்தல், வருமுன் காக்கும் உளவியல் நோக்கில் நிகழ்த்தப்படுவன என்பதும் கூறப்படுகிறது. விதி பற்றிய நம்பிக்கை கட்டுக்கடங்கா நிகழ்வுகளை வாழ்வோடு தொடர்புபடுத்திக் காண்பதற்கும் அமைதி கொள்வதற்கும் உரியதாகும் என்பதும் அடையாளப் படுத்தப்படுகிறது.

சத்தியம் செய்தல் சமய சமூக மரபின் பாற்பட்டது மட்டுமின்றிக் கதை மாந்தர் பண்பு நலன் ஆய்விற்கும் வழிவகுப்பதாகும்.

மீமானிட நிகழ்வுகள் விந்தைக்கு வியப்பிற்கும் வழங்கப்படும் கற்பனைத் தீனிகளாக மட்டுமின்றிச் சமயவுணர்வு ஊக்குவிகளாக அமைவதும் எடுத்துக்காட்டப்படுகிறது. தெய்வ மாக்கல் நிகழ்வுகள் ஒருவர் செய்த பாபத்திற்குப் பலர் வழங்கும் பரிகாரமாக அமைவதும் கண்டறியப்படுகிறது. இவ்வழிபாடு சமுதாயம் பாபமுக்தி பெறுவதற்கான ஓர் ஆன்மிக உத்தியாக கருதத் தக்கதாகும்.

தம்பிமார் கதை மாந்தர்கள் வெந்திறல் வீரமும் தீரமும் பெருமிதமும் உடையவர்களாதலின் அவர்கள் குண நலன்களோடு தொடர்புற்றுப் பல வீரயியல் கூறுகளும் நூலில் தாக்கம் பெற்றுள்ளது அடையாளங் காணப்படுகிறது. படையுதவி பெற படைத்தூது நேரடியாகவும் ஆட்கள் வழியாகவும் அமைவது சுட்டப்படுகிறது. பல்வேறு வகை, இன படையினரை அறிமுகப் படுத்த படையணி பயன்படுமாறும் எடுத்துக் காட்டப்படுகிறது.

படைப் பயணம் பற்றிய விரிவான விளக்கங்கள் வரலாற்றின் தாக்கத்தினை மட்டுமன்றிக் கதை நீட்சியினையும் கருத்தில் கொண்டமைவன எனலாம். சூறையாடுதல் என்பது போர் நெறியின் மறைவில் நிகழ்த்தப்படும் கொள்ளையும் திருட்டும் பேராசையை நிரப்பும் அக்கிரமச் செயலுமாகும் என்பதும் ஆய்ந்து பதிவு செய்யப்படுகிறது.

பாதிக்கப்பட்ட, அவமானமுற்ற நெஞ்சின் வீறுணர்ச்சியில் இன்னது செய்வேன் எனும் உறுதியுரையே வஞ்சினவுரையாக வெளிப்பட்டமைவது எடுத்துக்காட்டப்படுகிறது. படைமுகாம் கட்டுதல் இளைப்பாறவும் களைப்பாறவும் தயாரெடுக்கவும் மட்டுமின்றி எதிரணியினருக்கு உணர்த்தவுமாகும் என்பது உரைக்கப்படுகிறது. முற்றுகை என்பது எதிரியைத் தளர்த்திப் பணிய வைக்கவும் படைபலத்தை உணர்த்தவுமாக அமைவதும் எடுத்துக்காட்டப்படுகிறது.

வீரக்கதை மாந்தர்களின் போராற்றலையும் உடலாற்றலை யும் விதந்து போற்றும் நோக்கில், உரைக்கும் நோக்கில் போர்ச் செயல்பாடுகள் வருணிக்கப்படுகின்றன என்பதும் அடையாளங் காணப்படுகிறது. போரில் பீரங்கியும் வெடிக்குண்டுகளும் பயன்படுத்தபடுவதாக வரும் குறிப்புகள் வில்லுப்பாட்டின் பிற்காலப் பிறப்பையும் நவீன அறிவியல் தொழில் நுட்பத்தையும் சுட்டியமைவதாகும். களரி, வர்மம், சிலம்பம் முறைகள் கலந்த மற்போர் பற்றிய செய்திகள் குமரி மாவட்டப் பின்புலத்தைச் சுட்டியமைவதாகும். போரின் கொடூரத்தை உணர்த்தும் நோக்கில் களநிலை காட்சியாக்கப்படுவதும் எடுத்துரைக்கப் படுகிறது. தம்பிமாரின் வெற்றி தந்திரமாகத் தடுக்கப்பட, தம்பிமார் மீது வெற்றி கொள்ள வர்மா வஞ்சகமும் சதியும் பயன்படுத்துவதும் சுட்டிக்காட்டப்படுகிறது.

## தம்பிமார் கதைப்பாடலும் திருவிதாங்கூர் வரலாறும் - முடிவுகள்

தம்பிமார் கதைப்பாடல் ஒரு நாட்டுப்புற வில்லுப்பாட்டு அமைப்பிலுள்ள பாமரர் இலக்கியம். அக்காலத்தில் வழங்கப்பட்ட ஒரு நிகழ்வினை அடிப்படையாகக் கொண்டமைந்தது. அக்காலப் பாமரர்கள் தம்பிமாரை நேர்க் கதை மாந்தராகக் கண்டனர். அதனால் மன்னர் மார்த்தாண்ட வர்மா எதிர் மாந்தரானார். இந்தக் கதையை எழுதியவர்கள் உண்மை வரலாற்றைப் பெரிதும் அறிந்தவரல்லர். எனினும் தம்பிமார் உரிமை யிழந்தவராகவும், மாடம்பிமார் போரினிடையே பின்வாங்கும் சதிக்காரர்களாகவும் காட்டப்படுவதும் வரலாற்று நீதியாக கருதப்படுவதற்குரிய

தாகும். பிள்ளைமாரை மன்னரின் ஆதரவாளர்களாகக் காட்டியது மட்டுமே பெரும் முரண்பாடாக அமைகிறது.

பிள்ளைமார், மாடம்பிமார் ஆகியோர் ஆட்சி நிர்வாகத்தில் உயர் பதவி பெற்றிருந்த காலத்திலேயே உட்பூசல் விவகாரங்களில் ஈடுபட்டதாக வரலாறுகள் கூறுவதால் அரசக் கூட்டத்தினராகக் காட்டியிருக்கலாம் என்று அமைதி கொள்ளலாம். கற்பனை கலந்த வரலாற்றுக் கதைப் பாடல் இலக்கியத்தில் வரலாற்றுக் கூறுகளை அடையாளம் காணமுடியுமே தவிர முழு வரலாற்றையும் கண்டறிய முடியாது என்பதே உண்மை.

## முடிவுரை

கேரள வரலாற்று வீரப் போர்க்கதைப் பாடல்களில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்று தம்பிமார் கதை. பெரிதும் அறிமுகமாகாத இக்கதைப் பாடல் பற்றிப் பேரளவு ஆய்வு மேற்கொள்ளப்படவில்லை.

திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்டவர்மாவுக்கு எதிராகப் போராடி உயிர்த்துறந்த தம்பிமார்களை வரலாறு எதிர்மாந்தராகவே காட்டுகின்றன. ஆனால் தம்பிமார் கதைப்பாடல் இவர்களைத் தலைமை மாந்தராக அமைத்து, மன்னரை எதிர் மாந்தராகவும் காட்டுகின்றது. அக்காலக் கட்டத்தின் அரசியல் பூசலை மக்கள் நோக்கில் இக்கதைப் பாடல் எடுத்துரைக்கின்றது எனலாம். இக்கதைப் பாடலின் அமைப்பும், உள்ளீடும், நாட்டுப்புற வீரயியல் கூறுகளும், குறிப்புகளும் அக்கால அரசின் சமூகப் பின்புலத்தையும் நிலையையும் அறியப் பேருதவி புரிவதாகும் என்பது முடிபு.

# துணை நூற்பட்டியல்

## 1. தமிழ் நூல்கள்

1. அண்ணாமலை. மு, நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், மருதமலையான் பதிப்பகம், சென்னை, 1985.
2. இராசகோபால். கோ.வி, கதைப்பாடல் ஓர் ஆய்வு, மாருதி பதிப்பகம், சென்னை, 1985.
3. இராமநாதன். ஆறு, நாட்டுப்புற இயல் ஆய்வுகள், அணியகம், சென்னை, 1979.
4. கேசவன். கோ, கதைப்பாடல்களும் சமூகமும், தோழமை வெளியீடு, கும்பகோணம், 1985.
5. சக்திவேல். சு, நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1983.
6. சர்வேஸ்வரன். ப, ஒட்டன் கதை, நாஞ்சில் பதிப்பகம், நாகர்கோவில், 1923.
7. சுகுமாறன். கு, இளந்தோட்டம், சேரர் வரலாறும் மக்கள் வாழ்வியலும், சாந்தினி பதிப்பகம், நாகர்கோவில், 2005.
8. நடராசன். தி, சர்வேஸ்வரன். ப, (பதிப்பர்) தம்பிமார் கதை, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1977.
9. பெருமாள். அ.நா., தமிழில் கதைப்பாடல், உலகத் தமிழாய்வு நிறுவனம், சென்னை, 1987.
10. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், (பதிப்பர்) தமிழுக்கு கேரளத்தின் பங்களிப்பு, கருத்தரங்கக் கோவை, பல்கலைக்கழகக் கல்லூரி, திருவனந்தபுரம், 2005.
11. மேலவர், நாட்டுப்புறத் தமிழியல், அருளகம், திருவனந்தபுரம், 1985.
12. முருகனாந்தம். ச, நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள், உலகத் தமிழாய்வு நிறுவனம், சென்னை, 1991.
13. வரதராசன். கே.பி., மாவீரன் அனந்தபத்மநாபன் நாடார் வரலாறு, அனந்தபத்மநாபாலயம், கண்ணனூர், 2000.
14. லூர்து. தே, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், புனித சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, 2000.

15. மேலவர், (பதிப்பர்) நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, 1981.

16. மேலவர், நாட்டார் வழக்காறுகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1983.

## 2. தமிழ் ஆய்வேடுகள்

1. கல்பனா. எஸ், கான்சாகிபு சண்டை - ஓராய்வு, முதுகலைத் தமிழ் குறு ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 2007

2. திருமதி. கே, திருமலர் மீரான்பிள்ளையின் நாட்டுப்புறத் தமிழியல் கட்டுரைத் தொகுப்பு - ஓராய்வு, முதுகலைத் தமிழ் குறு ஆய்வேடு, கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம், 2005.

3. தெளா கிறிஸ்ட்டபல். டி, வீரக்கதைப் பாடல்கள் - ஓராய்வு, முதுகலைத் தமிழ் குறு ஆய்வேடு, கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம், 2006.

4. பால் என் பால்ஸ், தம்பிமார் கதை - ஓராய்வு, முதுகலைத் தமிழ் குறு ஆய்வேடு, கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம், 2007.

5. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், முஸ்லிம் தமிழ் வீரக் கவிதை - படைப்போர் காப்பியங்களும் கதைப் பாடல்களும் - ஆய்வு, முனைவர் பட்ட பெரும் ஆய்வேடு, கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம், 2004.

## 3. மலையாள நூல்கள்

1. இபுறாகீம் குஞ்ஞு, ஏ.பி, மார்த்தாண்ட வர்மா, சாம்ஸ்காரிக வகுப்பு, கேரள அரசு, திருவனந்தபுரம், 1990.

2. சங்குண்ணி மேனோன். பி, திருவிதாங்கூர் சரித்திரம், கேரள பாஷா இன்ஸ்ட்டிடியூட், திருவனந்தபுரம், 1973.

3. சிவசங்கரன் நாயர். கே, வேணாட்டின் பரிணாமம், கரன்ட் புக்ஸ், கோட்டயம், 2005.

4. திரிவிக்ரமன் தம்பி. ஜி, தெக்கன் பாட்டுகள் - ஒரு படனம், கேரள சாகித்ய அக்காடமி, திருச்சூர், 1999.

5. பத்ம குமாரி. ஜெ, **கதா கானங்களுடெ லோகம்,** பூர்ணா பப்ளிஷர்ஸ், கோழிக்கோடு, 1988.

6. பரமேஸ்வரன் பிள்ளை. பி.ஆர், **ராஜா கேசவதாஸ்,** சாம்ஸ்காரிக வகுப்பு, கேரள அரசு, திருவனந்தபுரம், 1993.

7. பாலகிருஷ்ணன் வெங்ஙானூர், **கன்னியாகுமரி கதகள்,** பிரசாந்தி பப்ளிஷர்ஸ், திருவனந்தபுரம், 2004.

8. ஸ்ரீதரமேனோன். ஏ, **கேரள சரித்திரம்,** டி.சி. புக்ஸ், கோட்டயம், 2009.

### 4. ஆங்கில நூல்கள்

1. Arunachalam M, **Ballad Poetry,** Gandhi Vidhyalayam, Thiruchittrambalam, 1976.

2. Vanamamalai. N, **Interpretation of Tamil Folk creations,** Dravidian Linguistic Association, Thiruvananthapuram, 1981.

3. Vanamamalai. N, **Studies in Tamil Folk literature,** NCBH, Chennai, 1969.

### 5. கட்டுரைகள்

1. சுப்பிரமணியன். எஸ், **இரவிக்குட்டிப்பிள்ளைப் போர்,** வாய்மொழிக் கட்டுரைகள், செந்தில் பதிப்பு, நாகர்கோவில், 1986.

2. மீரான்பிள்ளை. எம்.எம். திருமலர், **தம்பிமார் கதை,** நாட்டுப்புறத் தமிழியல், அருளகம், திருவனந்தபுரம், 1985.

3. மேலவர், **இரவிக்குட்டிப்பிள்ளைப் போர்,** நாட்டுப்புறத் தமிழியல், அருளகம், திருவனந்தபுரம், 1985.

4. மேலவர், **குமரி நாட்டார் கதை காட்டும் திருவிதாங்கூர் வீரர் அனந்தன் நாடார்,** 40ஆவது இந்தியப் பல்கலைக் கழக தமிழ்ப் பேராசிரியர் மன்ற கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொ.4, காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2009.

5. மீனாட்சிநாத பிள்ளை. ச, **தெக்கன் பாட்டுப் புலவர்களின் பங்களிப்பு,** தமிழுக்கு கேரளத்தின் பங்களிப்பு, பதிப்பர், திருமலர். எம்.எம். மீரான்பிள்ளை. பல்கலைக்கழகக் கல்லூரி, திருவனந்தபுரம், 2005.

----



## நூலாசிரியை அறிமுகம்

### எம்.எல். சுகதகுமாரி

பிறப்பு : 1980 ஜூலை 31. கல்லு வீடு, கூட்டமாவு, முளகுமூடு, கன்யாகுமரி மாவட்டம்.

**பெற்றோர்** : எஸ். லைசம்மாள், டி. மரியேந்திரன் நாடார்.

**கணவர்** : ஆவாரைக்குளம் பி. செல்லப்பா பாலகிருஷ்ணன் - சி. செல்வராணி தம்பதியினரின் மகன், **சி. ஞானசேகர்**, எம்.எஸ்சி (நுண்ணுயிரியல்) எம்.எஸ் சி (சூழலியல்), எம்.ஃபில்.

**புதல்வன்** : ஜி.எஸ். தர்ஷன். **சகோதரர்கள்** : நால்வர்.

**கல்விக் கல்லூரிகள்** : பயோனீயர் குமாரசுவாமி கல்லூரி, நாகர்கோவில்; தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை.

**இளம்முனைவர் ஆய்வு** : நெல்லை மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில், மராத்தியத் தன் வரலாற்று நூல்களான லட்சுமண் மானேயின் **அந்நியன்**, கெய்க்வாடின் **பழிக்கப்பட்டவன்** பற்றிய ஆய்வு.

**முனைவர் ஆய்வு** : அரசு யுஜிசி. உயர்க்கல்வி சிறப்பு நிறுவனம், திருவனந்தபுரம், பல்கலைக்கழகக் கல்லூரி, தமிழாய்வு மையம் வழி கேரளப் பல்கலைக் கழகத்தில், '**செய்யிதத்துப் படைப்போர் குறுங்காப்பியமும் கலிங்கத்துப் பரணியும் ஒப்பாய்வு**'.

**நெறியாளர்** : மேனாள் கல்லூரி முதல்வர், தமிழாய்வுத் துறைத் தலைவர், யுஜிசி முதுநிலை ஆய்வுத் திட்ட முதன்மை ஆராய்ச்சியாளர், தமிழ் மாமணி, இலக்கியச் சுடர், பேராசிரியர், முனைவர், திருமலர் எம்.எம். மீரான் பிள்ளை.

**இலட்சியம்** : கல்லூரிப் பேராசிரியராகி வீரக் காப்பியங்கள், கதைப் பாடல்கள், சிற்றிலக்கியங்கள் பற்றி ஆய்வு நூற்களை வெளியிடுதல்.

ISBN 819078635-0

